## ஆபத்து ஒன்று அகன்றது

★

1944 ஆம் ஆண்டில் சேலத்தில் கூட்டப்பட்ட மாநிலமாநாட்டில்தான் "தென் இந்திய நலவுரிமைச் சங்கம்" என்ற நீதிக்கட்சியின் பெயர் 'திராவிடக்கழகம்' என்று மாற்றப்பட்டது. இந்தப் பெயர் மாற்றத் தீர்மானத்தோடு, கழகத்தைச் சார்ந்தவர்கள் யாரும் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் வழங்கிய எந்தவித கௌரவப்பட்டத்தையும், பதவியையும் தாங்கியிருக்கக்கூடாது என்ற தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது. இந்தத் தீர்மானங்களை அறிஞர் அண்ணா அவர்கள் தாம் கொண்டுவந்து நிறைவேற்றினார்கள்.

பதவியையும், பட்டத்தையும் துறந்துவிடவேண்டும் என்று போடப்பட்ட தீர்மானம், நீதிக்கட்சியிலிருந்து வந்த பணக்காரர்களுக்கும், பட்டந்தாங்கிகளுக்கும், பதவியாளர்க்கும் பேரிடியாக இருந்தது. அவர்களெல்லாம் திராவிடக் கழகத்தோடு பங்குகொள்ளாமல், நீதிக்கட்சியின் பெயரிலேயே இருந்து வரத்தலைப்பட்டனர். அப்பொழுது நீதிக்கட்சியில் தலைவர்கள்தான் இருந்தார்களே ஒழிய, தொண்டர்கள் யாரும் இல்லை. பாடுபடும் தொண்டர்கள் அனைவரும் திராவிடக்கழகத்தில் இணைந்திருந்தனர். எப்படியேனும் திராவிடக்கழகத்தைத் தம் வழிக்கு மீண்டும் இழுத்துக் கொண்டால் தமக்கு வசதியாக இருக்கும் என்று நீதிக்கட்சித்தலைவர்களில் சிலர் எண்ணினர். அதற்கான முயற்சியையும் அவர்கள் மேற்கொண்டார்கள்.

நீதிக்கட்சியில் தலைவர்களாக இருந்த பொப்பிலி அரசர், செட்டிநாட்டரசர் முத்தையா, காலஞ்சென்ற தோழர் என. ஆர். சாமியப்பா ஆகியோர் நீதிக்கட்சிக்கும் திராவிடக்கழகத்துக்கும் இடையே ஒரு உடன்பாடு ஏற்படுத்த முயன்றனர். அதற்கான பேச்சுவார்த்தைகள் நடத்த திராவிடக் கழகத்தலைவராக அப்பொழுதும் இருந்துவந்த பெரியார் இராமசாமி அவர்களை நீதிக்கட்சித்தலைவர்கள் அழைத்தார்கள். அந்த அழைப்பை ஏற்று அவர்களைக்காணப் போவதற்கு முன்பு பெரியார் அவர்கள், அறிஞர் அண்ணா அவர்களிடம் அவர்கள் எதற்காகத்தம்மை அழைத்திருப்பார்கள் என்று கலந்தாலோசித்தார்கள். அண்ணா அவர்கள், "அவர்கள் உங்களைத் தம்வயப்படுத்தத் தான் இப்பொழுது அழைத்துள்ளார்கள். பட்டம் பதவியைத் துறக்கவேண்டும் என்று சேலம் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தைக் கைவிடும்படி வற்புறுத்தவே உங்களை அவர்கள் அழைத்திருப்பார்கள் என்று கருதுகிறேன். அவர்கள் அதற்கு நிதிதருகிறோம், இதற்கு நிதிதருகிறோம் என்று பணத்தாசையைக்காட்டி உங்களைத் தம்வயப்படுத்தலாம் என்று எண்ணிக்கொண்டிருப்பார்கள். நீங்கள் இதில்தான் மிக எச்சரிக்கையாக இருக்கவேண்டிநேரிடும். அந்தத் தீர்மானத்தைக்கைவிட நீங்கள் எந்த விதத்திலும் இடம் தந்துவிடாதீர்கள். அவர்களுக்கு விட்டுக்கொடுக்கும்படியான நிலைமை ஏதேனும் ஏற்பட்டால், என்னைப் போன்றவர்கள் இயக்கத்தைவிட்டு வெளியேறும்படியான நிலைமை ஏற்படும்" என்று சொல்லி அனுப்பினார்கள்.

சென்னை காஸ்மோபாலிட்டன் கிளப்பில் மேல்மாடியில், பொப்பிலி அரசர், செட்டிநாட்டரசர் முத்தையா, இராவ்பகதூர் என். ஆர். சாமியப்பா ஆகியோரைப் பெரியார் அவர்கள் சந்தித்தார்கள். அறிஞர் அண்ணா அவர்கள் ஊகித்து முன்கூட்டிக் கூறியவாறே நீதிக்கட்சித்தலைவர்கள் பல்வேறு துறைகளுக்கு நிதி தருவதாக வாக்களித்து, பட்டம் பதவியைத் துறக்கும் தீர்மானத்தைக் கைவிடும்படி பேரம் பேசினர். பணத்தோடுகூடிய நீதிக்கட்சித்தலைவர்களைக் கைவிடுவதா? அல்லது அண்ணாபோன்ற தொண்டர்களைக்கைவிடுவதா? என்ற பிரச்சினை பெரியார் உள்ளத்தைக் குடைந்தது. முடிவில் தொண்டர்களைக் கைவிடக்கூடாது என்ற முடிவுக்கு வந்து, நீதிக்கட்சித்தலைவர்களின் கருத்துக்கு இசைவு தராமல் பெரியார் அவர்கள் வந்துவிட்டார்கள்.

அறிஞர் அண்ணாவின் கண்டிப்புரையால் திராவிட இயக்கத்துக்கு அப்பொழுது ஏற்பட இருந்த ஆபத்து ஒன்று அகன்றது என்றுதான் சொல்லவேண்டும்.


# மன்றம்

இரா. நெடுஞ்செழியன், எம். ஏ.

மலர் 5 ★ (1—9—56) ★ இதழ் 9


## ஒற்றுமைக்கீதம்!

தூங்குகின்ற புலியை இடறிவிட்டு அதனை அடக்கவும் அஞ்சி, அதற்கு அடங்கவும் அஞ்சி வழி ஏதும் புலப்படாமல் அதற்கு இரையாகும் குருடனைப்போல், இந்தியப் பேரரசினர் மக்கள் உள்ளத்தில் படிந்துகிடந்த மொழிவழி மாநில உணர்ச்சியை நீண்ட காலமாகத் தூண்டிவிட்டுவந்து, இப்பொழுது அதற்கு அடங்கவும் அஞ்சி, அதனை அடக்கவும் அஞ்சித் திண்டாடித் துயரப்பட்டுத் தொல்லைகளுக்கு ஆளாகிவருகின்றனர். ஆங்காங்குக் கிளர்ந்தெழும் மொழிவழி மாநிலஉணர்ச்சிக்கு இந்திய வல்லரசு மிக்க விரைவில் இரையானால் கூட நாம் வியப்படைவதற்கில்லை. அதுதான் நடைபெறப்போகும் இயல்பான நிகழ்ச்சி.

தூங்குகின்ற புலி எப்பொழுதேனும் எழுந்திருக்கத்தான் போகிறது என்றாலும், அதனை முன் கூட்டியே குருடன் எழுப்பிவிட்டு அதன் கடுஞ்சினத்திற்கு ஆளாவதைப்போல, இந்திய பேரரசினர் மொழிவழி மாநில உணர்ச்சியை பெருமளவுக்குத் தூண்டி விட்டுவிட்டு இப்பொழுது அதனை எதிர்த்து நின்று, அது விளைவிக்கும் பெருங் கேடுகளுக்கு இரையாகின்றனர்.

'இந்தியா' ஒரு நாடல்ல, அது பலநாடுகள் ஒன்றுசேர்ந்த ஒரு துணைக்கண்டமாகும் என்பதைத்தான் மொழிவழி மாநில உணர்ச்சி தெள்ளத்தெளியக் காட்டத் தொடங்கிவிட்டது. இந்தியத் துணைக்கண்டத்திலுள்ள ஒவ்வொரு மொழிப் பகுதியினரும் தத்தம் மொழிவழி நின்று தங்கள் மண், தங்கள் மரம், தங்கள் வளம், தங்கள் நலம், தங்கள் மாடமாளிகை, தங்கள் கூட கோபுரம், தங்கள் உரிமை என்று கொள்ளத் தலைப்பட்டுவிட்டனர். தனி மாநில அமைப்புக்கு என்று கொள்ளப்படும் இத்தகைய உணர்ச்சி நாளடைவில் முற்றித் தனி நாட்டு அமைப்புக்குக் கொண்டுபோய்விடும் என்பதுமட்டும் உறுதி.

இந்தியா ஒரேநாடு, இதில் பேதமில்லை பிளவு இல்லை, சண்டையில்லை, சச்சரவு இல்லை, கோபமில்லை, தாபமில்லை என்று பண்டிதரும் பந்தும் ஆசாத்தும் பிரசாத்தும் எவ்வளவுதான் இட்டுக்கட்டிப் பேசினாலும், எழுதினாலும், நடைமுறையில் வற்புறுத்தினாலும், ஒற்றுமை முலாம் பூசினாலும் தனித்தனி என்று எண்ணும் எண்ணமும், அதற்காகப் போராடும் தன்மையும் எங்கணும் கிளர்ந்து எழுந்து கொழுந்துவிட்டு எரியக்காண்கிறோம். கேரளப் பகுதியிலிருந்து ஆறு ஏழு யானைகளும், ஏழு எட்டு தேக்கு மரங்களும் தமிழகம் பகுதிக்குக் கடத்திச்செல்லப் பட்டதாகத் தவறாக நினைத்துக்கொண்டு, அகில உலகக் கண்ணோட்ட நீதியிலேயே எதனையும் நோக்குவதாகக் கூறிக் கொள்ளும் பொதுவுடைமைக் கட்சித் தோழர் ஏ.கே. கோபாலன் அவர்கள் சீறி எழுந்து அவற்றிற்காகப் போராடப் போர்க்கோலம் பூண்டார் என்றால் மொழிவழி உணர்ச்சி, எந்த அளவுக்கு அகில இந்திய ஒற்றுமையை மறந்து ஓங்கிநிற்கிறது என்பதைப் புரிந்துகொள்ளலாம். உள்ளபடியே ஆராய்ந்து பார்க்கும் போது அப்படி யானைகளோ, மரங்களோ கடத்திச்செல்லப்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால் அவைகடத்திச் செல்லப்பட்டிருந்தால் அவர்கள் எந்தஅளவுக்குத் துள்ளிக்குதிப்பார்களோ தெரியவில்லை. எந்தக் காங்கிரசுத் தலைவர்களை மராட்டியரும், குஜராத்தியரும், பஞ்சாபிகளும், பீகாரிகளும், வங்காளிகளும் போற்றிப் புகழ்ந்து ஒப்புயர்வற்றவர்களாகக் கருதிவந்தார்களோ, அந்தத்தலைவர்களையே அவமானப்படுத்துவதும், இழித்தும் பழித்தும் பேசுவதும், எதிர்ப்பதும் தாக்குவதும், அடிப்பதும், உதைப்பதும், அவர்களுக்குக் கொடும்பாவி கட்டி இழுப்பதும், அவர்கள் படங்களுக்குச் செருப்புமாலை போடுவதும் ஆன செயல்களில் அந்த மக்களே ஈடுபட்டுள்ளனர். இவையெல்லாம் எதைக் காட்டுகின்றன? இந்தியா என்பது பல்வேறுபட்ட நாடுகளின் போலி ஒட்டே தவிர, ஒரே நாடு அல்ல என்பதை அல்லவா காட்டுகின்றன!

எனவேதான், காங்கிரசுத் தலைவர்கள் எவ்வளவு உரக்க ஒற்றுமைக் கீதம் பாடினாலும், அது வெறும் ஓசையாக நிலவிவருகிறதே யல்லாமல், உருவான பலனைத் தந்ததில்லை; இனித் தரப்போவதுமில்லை. இந்தியாவின் பல்வேறு பகுதிகள் தேவையான அடிப்படையில் தேவையான அளவுக்குத் தனித்தனி பிரிந்தே தீரும் என்பது மட்டும் உறுதி!

# கருத்துக் கதிர்

## உண்மையான பக்தி

“இனிமேல் கோவில் கட்டுவதற்குப் பணத்தைச்செலவழிக்கவேண்டாம். அந்தப்பணத்தைக்கொண்டு ஏழைக்குடிசையில்வாழும் மக்களுக்கு வீடுகட்ட உதவிசெய்யுங்கள். நோயாளிக்கு முழுமனதோடு தொண்டுசெய்வதுதான் சிறந்தபக்தி. துன்பத்தைத் துடைப்பதுதான் சிறந்த பக்தி ஆகும். ஆபத்தில் தொண்டு, உதவி செய்வதுதான் நாம் கடவுளுக்குப் பக்தி செய்வது என்பது பொருள்”.

—என்று விநோபாபாவே 25—8—50இல் வெள்ளாற்றுப் பொதுக்கூட்டத்தில் பேசியுள்ளார்.

* * *

## சனநாயகம் என்பது என்ன?

சனநாயகம் என்பது அதன பெயருக்கு ஏற்ப செயல்படவேண்டுமானால், ஒவ்வொருவரும் தமக்கு அநீதி இழைக்கப்பட மாட்டாது, நீதி கிடைக்கும் என்ற உணர்ச்சியுடன் வாழும் நிலைமை இருக்கவேண்டும். ஒருவன், தான் சிறுபான்மையினரைச் சேர்ந்தவனையினும், பேச்சுரிமை தனக்கு இருக்கிறது என்ற நம்பிக்கையுடன் வாழவேண்டும். பெரும்பான்மையினரைத் தம்பக்கம் திருப்புவதற்குத் தமக்கு முழு வாய்ப்பும் கிடைக்கும் என்ற உறுதியும் அவர்களுக்கு இருக்க வேண்டும். பெரும்பான்மையினர் தம் விருப்பப்படி செயலாற்றினால் கூட, அதனால் சிறுபான்மையினருக்குத் தீங்கு ஏற்படாது என்ற நம்பிக்கையும் நிலவவேண்டும். இதுதான் உண்மை சனநாயகம்”.

—என்று கவர்னர் பிரகாசா 24—9—56 இல் சென்னைப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாக் கூட்டத்தில் குறிப்பிட்டுள்ளார்.

* * *

## தென்மண்டலத்தின் தனித்தன்மை

“சென்னை, கேரளம், ஆந்திராவுடன் தெற்கு மண்டல சபையில் அதனைச்(மைசூரை)சேர்ப்பதுதான் அசல்திட்டம். பூகோள ரீதியாகவும், இன, மொழித்தொடர்பு, பொருளாதார பந்தம் போன்றவற்றின் பிரகாரமும் இதுவே பொருத்தமான ஏற்பாடு. ஆனால் இப்போதோ மைசூரை மேற்கு மண்டல சபையில் சேர்த்துவிடுவதென்று திடீரென சர்க்கார் முடிவுசெய்து எல்லோரையும் திடுக்கிட வைத்திருக்கின்றனர்......பம்பாயைவிட சென்னை, கேரளம், ஆந்திராவுடனேயே மைசூருக்கு அதிகத்தொடர்பு உண்டு. எனவே தெற்கு மண்டலத்தில் சேர்ந்திருந்தால்தான் அதற்கும் மற்ற ராஜ்யங்களுக்கும் அனுகூலம்...... ராஜ்யங்களுக்காக மண்டல சபைகளே ஒழிய, மண்டல சபைகளுக்காக ராஜ்யங்கள் ஏற்படவில்லை. தத்தம் சக்தி, சாதனங்களைச் சிதறவிடாமல் அந்தந்த பிராந்திய ராஜ்யங்கள் ஒன்றுபட்டு இயங்கிச்சீராக முன்னேறுவதற்காகவே மண்டல சபைகள் அமைக்கப்படுகின்றன. மைசூரையோ ஆந்திரம், சென்னை, கேரளம் ஆகியவை மூனறுபுறமும் சூழ்ந்துள்ளன. இந்த ராஜ்யங்களுக்கிடையே பரஸ்பர அக்கரையுள்ள விஷயங்கள் எவ்வளவோ இருக்கின்றன. எல்லைப்பிரச்சினைகளும் பல உள்ளன”.

—என்று ‘சுதேசமித்திரன்’ இதழ் தனது 25—8—56 இதழில் குறிப்பிட்டுள்ளது.

* * *

## ஆங்கில மொழியின் இன்றியமையாமை

“ஆங்கிலமொழி ஒரு அகில உலக மொழியாகிவிட்டது அதன் இலக்கியம் மிகச் செழிப்பானது. ஆகவே அதை நாம் வெறுத்தொதுக்கவோ புறக்கணிக்கவோ முடியாது. அதற்கு மாறாக நவீன சிந்தனைப்போக்குகளை அறிந்துணர அம்மொழியுடன் நாம் தொடர்பு கொள்ள வேண்டும். அகில உலக விவகாரங்களில் நமக்கே சாதகமாகக் காரியங்களைச் செய்ய அதைப்பயன்படுத்துவது அவசியம். உலகின் பலநாடுகளில் படித்தவர்கள் தங்கள் சொந்த மொழியைக்கற்பதோடு அகிலஉலக மொழியான ஆங்கிலத்தையும் படித்துத் தெரிந்துகொள்கிறார்கள்.”

—என்று டாக்டர் ராஜேந்திர பிரசாத் 18—8—56இல் சென்னையில் நடைபெற்ற இந்தி பிரசாரசபைப் பட்டமளிப்பு விழாவில் பேசும்போது குறிப்பிட்டுள்ளார்.

* * *



# செய்திச்சுருள்

## கடலை எண்ணெய் ஏற்றுமதி

1955—56 ஆண்டில் சென்னையிலிருந்து ஒரு கோடி அறுபத்து மூன்று இலட்சம் காலன் கடலை எண்ணெய் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கிறது. இதில் 83 இலட்சம் காலன் பர்மாவுக்குச் சென்றுள்ளது. சாகுபடி நன்றாக இருந்து ஏற்றுமதி அளவும் அதிகமாக இருந்தால் ஏற்றுமதி இன்னும் மிகவாகலாம். பர்மாவிலிருந்து இறக்குமதி செய்யப்படும் ஏராளமான அரிசிக்கு ஈடு செய்ய அந்நியச் செலாவணிக்காக எண்ணெய் ஏற்றுமதி மேற்கொள்ளப்படுகிறது. கடலை எண்ணெய் உற்பத்தி திராவிடத்தின் வளங்களிலே ஒன்று.

* * *

## இலங்கையில் அறப்போர்க்கொடி ஏற்றம்

இலங்கைக் கூட்டாட்சியின் ஒரு உறுப் பாகத் தமிழ் பேசும் மக்களுக்கு ஒரு தனி மாநிலம் ஏற்படுத்த இன்னும் ஒரு ஆண்டிற்குள் அதிகாரிகள் நடவடிக்கை எடுக்காவிடில், அறப்போராட்டம் ஆரம்பிப்பது என்று இலங்கைத் தமிழரசுக்கட்சி திரிகோணமலையில் நடைபெற்ற அதன் நான்காவது மாநாட்டில் ஒரே மனதாகத் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது. (1) இப்போதைய அரசியல் சட்டத்திற்குப் பதிலாக, கூட்டாட்சி மக்கள் அடிப்படையில் சனநாயக அரசியல் சட்டம் ஒன்றை எடுக்க வேண்டும். (2) சிங்களம் போலவே தமிழுக்கும் அரசாங்க மொழி சமதகுதி அளிக்க வேண்டும். (3) இப்போதுள்ள குடியுரிமைச் சட்டங்களைத் தள்ளிவிட்டு சாதாரண வாழும் கால இட பரீட்சை அடிப்படையில் புதிய சட்டங்களை இயற்ற வேண்டும். (4) பரம்பரைத் தமிழ்ப் பகுதிகளில் சிங்கள மக்களைக் கொண்டு வந்து குடியமைப்பதை உடனே நிறுத்தவேண்டும். இந்த நான்கும் மாநாட்டின் முக்கிய கோரிக்கைகளாகும். இலங்கைத் தமிழரசுக் கட்சி அறப்போர்க் கொடி ஏற்றிவிட்டது. அறப்போரின் சீரிய வெற்றியை எங்கணும் உள்ள தமிழர்கள் ஆவலோடு எதிர்பார்க்கின்றனர்.

## தமிழக அரசின் கல்வித்துறை

தமிழக (சென்னை) அரசில் 1954 55 ஆம் ஆண்டில் கல்வித் துறைப் புள்ளி விவரம் இருந்தவிதம் வருமாறு:

| | |
|---|---|
| ஆரம்பப் பள்ளிகள் | — 25,507 |
| ஆரம்பப்பள்ளி மாணவர்கள் | — 31,93705 |
| ஆதாரக் கல்விப் பள்ளிகள் | — 1075 |
| ஆதாரக் கல்விப் பயிற்சிப் பள்ளிகள் | — 47 |
| செகண்டரி கல்விப் பள்ளிகள் | — 1031 |
| கலைக் கல்லூரிகள் | — 40 |
| வைத்தியக் கல்லூரிகள் | — 5 |
| தொழிற் பயிற்சிப் பள்ளிகள் | — 30 |
| ஓவியக் கலைப் பள்ளிகள் | — 17 |
| முதியோர் பள்ளிகள் | — 806 |
| நூலகங்கள் படிப்பகங்கள் | — 2566 |

* * *

## சுயமரியாதைத் திருமணச் சட்டம்

சுயமரியாதைத் திருமணங்களைச் செல்லுபடியாக்க வகை செய்யும் மசோதா ஒன்றைக் கொண்டுவந்து நிறைவேற்றுவதற்கான முயற்சிகள் எடுக்கப்படும் என்று, தமிழக (சென்னை) சட்ட மன்றத்தில், தமிழக (சென்னை) அரசியலார் கூறியுள்ளனர்.

## மதுரைத் தமிழ்ச்சங்கக் காப்பாளர்

வடநாட்டிலுள்ளவர்கள் தங்கள் மொழிச் சங்கங்களின் காப்பாளராகத் தென்னாட்டவரைக் கொள்ளும் பெருந்தன்மை அறவே அற்றிருக்கும் நிலையில், மதுரைத் தமிழ்ச் சங்கத்திற்குக் காப்பாளராக இருக்க வேண்டும் என்று வடநாட்டு இராசேந்திர பிரசாத் அவர்களைச் சங்கத்தார் பெருந்தன்மையோடு கேட்டுக்கொள்ள, அவரும் புதியதொரு தலைமை தமக்குக் கிடைக்கிறது எனற பெருமிதத்தோடு அதற்கு இசைவு தந்துள்ளார்.

* * *

## கோயிலில் குடியிருப்பது வெளவாலா? கடவுளா?

கோயிலில் குடியிருப்பது வெளவாலா? கடவுளா? என்று ஐயப்பாடு கொள்ளும் அளவுக்கு நிலைமை முற்றிப்போயிருக்கிறது. கோயில்களில் பொறுக்க முடியாத அளவுக்கு வெளவால்களின் தொல்லைகள் ஏற்பட்டுள்

ளன் என்று தமிழக (சென்னை) அறநிலைய அமைச்சர் சட்ட மன்றத்தில் வெளியிட்டுள்ளார். இரசாயன மருந்துப் பொருள்களைப் பயன்படுத்தி அவைகளை ஒழிப்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருப்பதாகவும் அவர் அறிவித்துள்ளார். இதிலிருந்து கோயில்களில் உயிரோடு விளங்குவது வௌவாலே ஒழிய 'கடவுள்' அல்ல என்பதும், அந்த வேள்வர்லை ஒழிக்கும் ஆற்றலை தமிழக (சென்னை) அரசுதான் பெற்றிருக்கிறதேயல்லாமல்; 'கடவுள்' பெற்றிருக்கவில்லை என்பதும், மனிதனைக் 'கடவுள்' காப்பாற்ற வேண்டியது போகக், 'கடவுளை' மனிதன் காப்பாற்ற வேண்டியிருக்கிறது என்பதும் பெறப்படுகின்றன.

* * *

## வடக்கு எல்லைக் கமிஷன்

நீண்ட காலமாக இழுத்துக்கொண்டிருக்கும் தமிழக—ஆந்திரா எல்லைப் பிரச்சினையைத் தீர்க்க உடனடியாக எல்லைக் கமிஷன் நியமிக்க வேண்டும் என்று தமிழக (சென்னை) அரசியலார் இந்திய அரசியலார்க்கு எழுதி யிருப்பதாகத் தெரிய வருகிறது. அவ்விதமே கமிஷன் நியமிக்கப்படும் என்று தமிழக அரசியலாரால் நம்பப்படுவதாகவும் சொல்லப்படுகிறது.

* * *

## மாத்திரை உணவு

ஒரு வேளைச் சாப்பாட்டிலுள்ள சத்து பூராவையும் கொடுத்துவிடக் கூடிய மாத்திரை அமெரிக்க அறிவியலறிஞர்களால் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அமெரிக்கப் புற்றுநோய் ஆராய்ச்சிக் கழகத்தைச் சேர்ந்த நான்கு அறிவியல் அறிஞர்கள் இவ்வித செயற்கை உணவைத் தாங்கள் கண்டு பிடித்திருப்பதாகத் தெரிவித்துள்ளனர். எலிகளுக்கு இதைக் கொடுத்துப் பார்த்ததில், அவை வளமாகக் கொழுத்து வளர்ந்தது மட்டுமல்லாமல், இதை அவை மிகவும் விரும்பியும் உட்கொண்டனவாம். கடித்துத் தின்ன அவசியமில்லாத போதிலும் கூட அவற்றின் பற்களும் உறுதியாக வளர்ந்தனவாம். பொடி செய்யப்பட்ட அமினோ ஆசிட்டுகள் (மாமிசம், முட்டை, பால் முதலிய புரத உணவுகளிலுள்ளன இவை), பாஸ்பேட், வைட்டமின்கள், குளுகோஸ், உப்புகள் முதலிய நாற்பது பொருள்களைக் கலந்து தயாரிக்கப்பட்ட வெண்ணிறப் பொடியாகவுள்ள இந்த உணவு, தண்ணீரில் கரைத்துக் கொடுக்கப்படுகிறது. ஒரு அவுன்சை (இதிலும் பாதி அளவு தண்ணீர்) உட்கொண்டாலும் போதும், எலிகள் முற்றிலும் பசி நீங்கப்பெற்று தேவையான ஆக்கம் முழுவதையும் பெற்று விடுகின்றனவாம். வழக்கமான உணவைப் புசிக்கும் எலிகளைவிட இவற்றின் சந்தானவிருத்தி ஆற்றல் போன்றவையும் சற்றும் குறைவுபடவில்லையாம். இந்த உணவுப் பொடி, மாத்திரைகளாக்கப்பட்டு விற்பனைக்கு விரைவில் வெளிவரக்கூடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

* * *

## குழாய் மூலம் பால் வழங்கல்

கிரிமால் என்ற ஆத்திரியா நகரத்தில் குழாய் (பைப்) மூலம் பால் கொடுக்கத் துவங்கியிருக்கிறார்கள். ஐரோப்பாவிலேயே பெரிய நீர் வீழ்ச்சியுள்ள இவ்விடத்தில் கோடை காலம் வந்துவிட்டால், கடும் பால்பஞ்சம் ஏற்பட்டு விடுவது உண்டு. காரணம் மேய்ச்சல் நிலத்தை நாடி ஆல்ப்ஸ் மலையில் முகாம் போட்டு விடுவார்கள் பால்காரர்களெல்லோரும். அங்கே அன்றாடம் கறந்த பாலைச் செலவழிக்க வழியில்லாது பாலாடைக் கட்டியாகவும், வெண்ணெய்யாகவும் மாற்றி விடுவார்கள். அவர்களுக்கும் நகர மக்களுக்கும் இவ்விதக் கஷ்டநஷ்டம் ஏற்படுவதைத் தவிர்க்கும் பொருட்டு இப்பொழுது மலையிலிருந்து நகருக்குக் குழாய் போடப்பட்டு விட்டது. இது மூலமாகப் பகல் முழுவதும் நிமிடத்திற்கு 20 காலன் பால் ஓடி வருகிறது.

* * *

## செயற்கைக் கிரகம்

'சிறிய சந்திரன்' என்ற செயற்கைக் கிரகத்தைப்பற்றிய ஆராய்ச்சியில் அமெரிக்கக் கடற்படை ஆராய்ச்சிப் பரிசிலனைச்சாலையைச் சேர்ந்த அறிவியலறிஞர்கள் ஈடுபட்டுள்ளனர். 800 அல்லது 900 மைல் உயரத்துக்குத்தான் இச்செயற்கைக் கிரகம் செல்லக் கூடுமென அவர்கள் இப்பொழுது தெரிவிக்கின்றனர். உலகைச் சுற்றி இந்தச் செயற்கைக் கிரகத்தின் விரைவு மணி ஒன்றுக்கு 18000 மைலாக இருந்தது 19000 மைலாக உயர்த்தப்பட்டுள்ளது.



# ★ மருத்துவ மயக்க மருந்து ★

**(5)**

"உங்கள் நோயாளி தயாராக இருக்கிறன்" என்று கூறி மார்டன், தனது புதிய வேதனையற்ற ரணமருத்துவத்தின் துவக்கவேலை முடிவுற்றதை வாரனுக்குத் தெரிவித்தார்.

நோயாளி உறங்குபவன் போலக் காணப்பட்டான். டாக்டர் வாரன் ரணமருத்துவக் கத்தியைக் கையில் எடுத்தார். எங்கும் அமைதி. எல்லோரும் நிலையிலா ஒருவித உள்ளத் தூண்டுதலுடன் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

நோயாளியின் கழுத்தில் இருந்த கரளையில் வாரன் கத்தியை வைத்தார்.

ஒரு கீறல்!

கூச்சலில்லை! வேதனையின் அறிகுறியில்லை! நோயாளி உறங்குபவன் போலவே இருந்தான். வாரன் தனது வேலையைத் தொடர்ந்தார்.

ஒரு நிமிடம் ஆயிற்று. இரண்டு, மூன்று...

கரளை வெட்டி எடுக்கப்பட்டது! இன்னும் கூச்சல் இல்லை—வேதனையில்லை.

நோயாளி உணர்வைப்பெற ஆரம்பித்தான். வாரன் அவனிடம் தாழ்ந்து, வேதனை ஏதும் ஏற்பட்டதாவெனக் கேட்டார். கழுத்தில் ஒரு சிராய்ப்புப்பட்டதுபோல் இருந்ததெனக்கூறினன்.

பலவித பயங்கரச் சூழ்நிலைகளில் அதுவரை ரணமருத்துவம் செய்துவந்த வாரன், வேதனையற்ற ரணமருத்துவத்தைக்கண்டு பெருவியப்படைந்தார். பரபரப்புடன் இருந்த பார்வையாளரை நோக்கி வாரன், "தோழர்களே! இது ஏமாற்று வித்தையல்ல!" என்று சுருக்கமாகக்கூறி, மார்டன் கண்டுபிடித்த முறையின் வெற்றியை அறிவித்தார்.

மார்டன் கொண்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை. குறித்த நேரத்தில் அங்கு வந்து சேரமுடியுமோ தனது முயற்சி வெற்றிபெறுமோ என அஞ்சிக் கொண்டிருந்தார். வாயுவைச் செலுத்தும் அந்தக் கண்ணாடிக் கருவியைத் தயாரிப்பதிலேயே முதல்நாள் இரவு முழுவதும் விழித்திருந்தார். தனது நண்பன் அதை முடித்துக் கொடுக்கும் வரையில் அவருக்கு நிம்மதியே இல்லை. முடிந்ததும் அதைச் சரிபார்க்கக் கூட நேரமில்லை, எடுத்துக்கொண்டு மருத்துவ மனை நோக்கி ஓடோடியும் வந்தார். இன்னும் கொஞ்சம் நேரம் கடந்திருந்தால், மார்டனது எண்ணங்கள் முயற்சிகள் யாவும் வீணாகியிருந்திருக்கும். மயக்க மருந்து 'பிறக்க' இன்னும் கொஞ்ச காலம் சென்றிருக்கும்.

முடியாது என்று கருதப்பட்டுவந்ததை மார்டன் முடித்தார். பல அறிஞர்களின் முன்னிலையில் ரணமருத்துவ வேதனையை நீக்கினர். "யாரோ ஒருவர்" என்று பேசும்படியாக உள்நுழைந்தார். "அவர்தான்!" என்று புகழும்படி வெளியேறினர்.

கடைசியில் வேதனையற்ற ரணமருத்துவத்திற்கான **மயக்க மருந்து கண்டுபிடிக்கப்பட்டது.** உண்மையில் மயக்க மருந்து இதற்கு இரண்டாண்டுகளுக்கு முன்னரே போஸ்டன் நகரில் தோற்றமளித்தது, வெல்சின் வழியாக. ஆனல் அதை அப்பொழுது அவர்கள் உணர்ந்துகொள்ளவில்லை. மார்டன் மூலமாகத்தான் அதை அறிந்தார்கள், புகழ்ந்து பாராட்டினர்கள்.

போஸ்டன் நகரிலிருந்து வெளியான செய்தித்தாள்கள் மார்டனின் கண்டுபிடிப்பைப் பெருந்தலைப்பிட்டு அறிவித்தன. நாடு முழுவதிலும் மார்டனின் கண்டுபிடிப்புப்பரவிற்று. பலவிதக் கழகங்களிலிருந்தும், மருத்துவ மனைகளிலிருந்தும் வாழ்த்துரைகளும், நன்றியறிவிப்புகளும் வந்து வந்து குவிந்தன. சிலர் கடிதங்களுடன் அன்பளிப்பாகப் பணம் அனுப்பிவைத்தனர். இப்பொழுதைப் போலல்லாமல் அப்பொழுது மதஉணர்வு அதிகமிருந்ததால், பலர் தனிப்பிரார்த்தனைக்கான வார்த்தைகளைத்தேடி பைபிளைப் புரட்டினர்.

ஈதர் மயக்க மருந்து பற்றிய செய்தி விரைவிலேயே இங்கிலாந்து ஐரோப்பா மற்றும் பல

இடங்களுக்கும் பரவியது. மார்டன் மசாச்சுசெட்ஸ் மருத்துவ மனையில் தனது மயக்க மருந்தைப் பயன்படுத்தியதற்கு இரண்டு மாதங்களுக்குள்ளாகவே இங்கிலாந்தில் லிஸ்டன் என்ற மருத்துவர் ஈதர் மயக்க மருந்தை ரணமருத்துவத்தில் பயன்படுத்தி வெற்றி பெற்ருர். ஆனுல் சில இடங்களிலிருந்து இப்புதிய ரணமருத்துவ முறைக்கு எதிர்ப்பு ஏற்பட்டது. பெரும்பாலான ரணமருத்துவங்களில் நோயாளிகள் வேதனையோடு இருப்பது அவசியம் என்றும், அதைத்தடுப்பது நோயாளிகளுக்குக் கேடு பயப்பதாகும் என்றும் பிலடெல்பியாவில் ஒரு மருத்துவர் கூற, அதனுல் அங்கு புதிய ரணமருத்துவமுறை புகுவதற்கு ஓராண்டிற்கு மேலாகியது.

“வேதனை என்பது சர்வசாதாரண நிகழ்ச்சி; அதை நீக்கவல்ல ஒரு கண்டுபிடிப்பு ஒரு பெரும் காரியம் எனக்கொள்ளமுடியாது” என்று பிரெஞ்சு உயிர்நூல் அறிஞர் ஒருவர் குறிப்பிட்டார்.

வில்லியம் அட்கின்சன் என்ற பல் மருத்துவர், “தாங்கிக்கொள்ளவேண்டும் என்ற கடவுளின் படைப்பிற்குப் புறம்பாகச் சென்று வேதனையை நீக்க முயல்வது தவறு” என்று கூறினர்.

“மயக்க மருந்து சாவின் தூதன். ரணமருத்துவம் ஒவ்வொரு முறையும் வெற்றியுடன் முடிந்தாலும் அதில் கெடுதல் இல்லை என்று எண்ணுமலிருப்பதற்கில்லை. அது வியாதியைப் புதிதாக உருவாக்குகின்றது, வாழ்க்கையின் பெரும் பயணத்திற்கும், சமூகஉயர்விற்கும் அது உகந்ததல்ல” என்று ஒரு மருத்துவர் குறிப்பிட்டு எழுதினராம்.

இதுபோன்ற பல கருத்துக்கள் ரணமருத்துவ மயக்க மருந்திற்கெதிராக எடுத்து வைக்கப்பட்டாலும், நாளடைவில் ரணமருத்துவத்தில், மயக்க மருந்து இன்றியமையாத ஒன்றென ஏற்றுக் கொள்ளப்பட்டது.

ஆனுல் மற்ருெரு வகையில் ரணமருத்துவ மயக்க மருந்து பெருந்தொல்லைக்குட்பட்டது. அறிவியற் கண்டுபிடிப்புகளில் பல, மதவாதிகளின் எதிர்ப்பிற்குட்பட்டு, கண்டுபிடிப்பாளர்களைப் பல் தொல்லைகளுக்குள்ளாக்கியிருக்கின்றன. ஆனுல் மயக்கமருந்துக் கண்டுபிடிப்பில் கண்டுபிடித்தது யார் என்ற வாதமே பெரும் சிக்கலை எழுப்பிவிட்டது.

பொதுவாக ஒரு முயற்சியில் ஒருவர் ஈடுபடும்போது அவருக்கு ஒத்துழைப்பாக இருப்பவர்களை, முயற்சியில் அவர் வெற்றிபெற்றகாலை போற்ருமலிருக்கமாட்டார்; நன்றியைத் தெரிவிக்கத் தவறமாட்டார், கடமையை மறக்க மாட்டார்.

எடுத்துக்காட்டாக, ஜோசப் லிஸ்டர் (Joseph Lister) என்ற மருத்துவர் இங்கிலாந்தில் 1867 ல், ரணமருத்துவத்தில் அழுகல் தடுப்பு முறையைக் (Anti Septic Surgery) கண்டுபிடித்து புகுத்தியதைக் குறிப்பிடலாம். பிரான்சு நாட்டில் லூயி பாஸ்டர் என்பவர், பொருள்கள் அழுகிவிடுவதற்கும், புளித்துவிடுவதற்கும் கண்களுக்குப் புலனுகாத நுண்ணிய கிருமிகள் (Bacteria) காரணம் எனக் கண்டுபிடித்தார். ஆனுல் இந்த உண்மை ரணமருத்துவத்தில் எவ்விதம் பயன்படும் என்பது பற்றிய எண்ணம் பாஸ்டருக்கு எழவில்லை. ரணமருத்துவத்திற்குப்பின் ரணம் ஆருமல் அழுகிப்போய் விடுவதால், நோயாளிகளில் எண்ணற்றவர் இறந்துவந்தனர். லூயி பாஸ்டரின் ஆராய்ச்சியைப் படித்த லிஸ்டர், ரணங்கள் அழுகி விடுவதற்கும் பாஸ்டர் குறிப்பிடும் கிருமிகள்தான் காரணம் என்றும், கிருமிகள் பரவுவதைத் தடுக்கும் வகையில் ரணமருத்துவத்தைக் கையாண்டு ரணத்தை முடவேண்டும் என்றும் கூறி, தனது எண்ணத்தை வெளியிட்டார். தனது புதிய கொள்கையை ரணமருத்துவத்தில் புகுத்தி அதில் வெற்றியுங் கண்டார். இந்த முறையில் ரணமருத்துவம் வளர்ச்சி பெற்றதால் அழுகிய ரணத்துடன் இறக்கும் நோயாளிகளின் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்து வெற்றியைத் தந்தது. இப்புதிய முறையை லிஸ்டர் கண்டுபிடிப்பதற்கு பாஸ்டரின் கண்டுபிடிப்புதான் முக்கிய காரணமாக அமைந்தது. லிஸ்டர் அதை மறக்கவில்லை. மறைக்கவும் இல்லை. பாஸ்டருக்கு ஒரு கடிதம் எழுதி, அதில் பாஸ்டரின் கண்டுபிடிப்பின் மேன்மையைப் புகழ்ந்தும், அந்தக் கண்டுபிடிப்பின் வாயிலாக ரணமருத்துவம் சிறப்படைந்த தன்மையையும் விளக்கி தனக்கு ஒரு முக்கியமான உண்மையை அறிவித்ததற்காகத் தனது நன்றியைத் தெரிவித்துக் கொண்டார். பாஸ்டரின் கொள்கையைத்தான் ரணமருத்துவத்தில் புகுத்தியதாகச் சொல்ல லிஸ்டர் தயங்கவில்லை. அவர் செய்தது அதுதான். அதற்காக உலகம் அவரைப் புகழ்கின்றது.

முதல் தடவையாக, ரணமருத்துவத்தில் பயன்படுத்தும் நோக்கத்தோடு, நைட்ரஸ் ஆக்சைட் வாயுவின் தன்மையை ஆராய்ந்தபோது, வெல்சிற்கு உதவிசெய்த ஜான் ரிக்ஸ் அந்தச் சம்பவத்தைப் பற்றிக் கூறுகையில், புதிய ரணமருத்துவ மயக்க மருந்துக் கண்டு



பிடிப்பின் சிறப்பில் தன்னுடையபங்கு யாதுமில்லை என்றும், அது வெல்சைச் சார்ந்ததேயாகும் என்றும் குறிப்பிட்டிருக்கிருர்.

மார்டன் தனது மயக்க மருந்துக் கண்டுபிடிப்பில், வெல்ஸ், ஜாக்சன் இவர்களிடமிருந்து பெற்ற ஒத்துழைப்பை ஒப்புக்கொண்டிருந்திருந்தால், அவர் தன்னையும் காப்பாற்றிக்கொண்டிருக்கலாம்—மற்றவர்களையும் தொல்லைகளிலிருந்து விடுவித்திருக்கலாம். ஆனுல் லிஸ்டர், ரிக்ஸ் இவர்களைப்போன்று உண்மையை ஒப்புக்கொள்ள ஜாக்சன், மார்டன் இருவருமே முன்வரவில்லை. தனது ஆசிரியனும் நண்பனுமான வெல்சிடமிருந்து தெரிந்துகொண்ட எல்லா உண்மைகளையும் கடைசிவரை தான் அவரிடமிருந்து அறிந்துகொண்டதாகக் கூற ஒப்பவில்லை. தன்னுடைய சொந்த முயற்சியேயென வாதிட்டார். சிறிதுகாலம்வரை தனது கண்டுபிடிப்பில்ஜாக்சனுக்கும் பங்கு உண்டு என்பதை ஏற்றுக்கொண்டு பின்னுல் ஜாக்சனையும் மறுத்துவிட்டு கண்டுபிடிப்பின் சிறப்பிற்குத் தான் ஒருவனே உரியவன் என்று கூறி,பரிசில் பெற விரும்பினர்.

1846ம் ஆண்டு அக்டோபர் 16-ம் நாள் மயக்க மருந்து முறையில் நடைபெற்ற முதல் ரணமருத்துவத்தையடுத்து, மாசாச்சுசெட்ஸ் மருத்துவ விடுதியில் மார்டன் தனது ரகசிய மருந்தை பல தடவைகளில் பயன்படுத்தி மருத்துவ விடுதியினரின் போராதரவைப் பெற்ருர். மார்டன் தனது புதிய மயக்க மருந்தின் உண்மைப்பெயரை வெளியிடாமல், அது ஒரு கலவைப் பொருள் என்று கூறி கடைசியில் அதற்கு லீதியன் (Lethcon) என்ற புதிய பெயரைக் கொடுத்தார். தனது புதிய முறையைக் கையாளுவதற்கேற்ற கருவிகளைச் செய்து அவைகளைத் தனியுரிமைபெற்று விற்பதன் மூலம் பெருஞ்செல்வம் சேர்க்கலாம் என்று மார்டன் பெரியதோர் திட்டம் தீட்டிக் கொண்டிருந்தார். இதன் காரணமாகவே மயக்க மருந்தின் உண்மைப் பெயரைத் தெரிவிக்க மறுத்துவந்தார்.

முதன்முதலில் ஈபன் பிராஸ்ட் என்ற நோயாளிக்கு தனது புதிய மயக்க மருந்தைக் கொடுத்து வெற்றி பெற்ற உடனேயே மார்டன், எடி (R. H. Eddy) என்பவரைக் கண்டு தனது முறையை உரிமையாக்குவது பற்றிய யோசனை கேட்டார். எடியின் தந்தையான காலெப் எடி என்பவர் உரிமைப்பதிவு நிலைய மேலதிகாரியாக இருந்ததால் எடிக்கு உரிமைப்பதிவு பற்றிய விளக்கங்கள் தெரிநதிருந்தன. மார்டனது முறையை உரிமையாக்குவதில் சில சிக்கல்கள் இருக்கலாமென்றும் சட்டநுணுக்கங்களை அறிந்து சொல்ல வேண்டும் என்றும் எடி கூறினர். இதன்பிறகு சில நாட்கள் சென்றன. மார்டன் மாசாச்சுசெட்ஸ் மருத்துவ விடுதியில் தனது முறையைச் செயலாற்றிக்காட்ட அழைக்கப்பட்டார். அங்கு சென்று தனது முறையை யாவரும் போற்றும் வகையில் செய்துகாட்டினர்.

இதையடுத்து அக்டோபர் 21ம் நாளன்று புதிய முறையை மார்டன் உரிமையாக்கிக் கொள்ளலாம் என்பதைத் எடி தெரிவித்தார். அதோடு மார்டனை ஜாக்சன் பார்க்கவிரும்புகிருர் என்றும், கண்டுபிடிப்பில் தனக்கும் பங்கு உண்டு என்று ஜாக்சன் கூறுகிருர் என்றும், அப்படியிருப்பின் உரிமை இருவரின் பேரில்தான் எடுக்கவேண்டும் என்றும் எடி அறிவித்தார். ஜாக்சன் எடியின் குடும்ப நண்பராவார். ஆகவே மார்டனது முயற்சிகள் ஜாக்சனுக்குத் தெரியவந்தன. இரண்டு நாட்கள் கழித்து ஜாக்சன் மார்டனைச் சந்தித்து தான் வெளியிட்ட எண்ணத்தின் வாயிலாகவே மார்டன் ஈதர் மயக்க மருந்தைக்கண்டுபிடித்தாரென்றும் அதற்காகத் தனக்கு 500 டாலர் பணம் கொடுக்கவேண்டும் என்றும் கூறினர். ஜாக்சனை எதிர்த்துக்கொண்டால் உரிமை எடுக்க இயலாது என்பதை அறிந்த மார்டன், அந்தத்தொகை தனது லாபத்தில் 10 ல் ஒருபங்காக இருக்குமானுல் கொடுப்பதாகக் கூறினர். இதையடுத்து, தனது பெயரும் உரிமையில் சேர்க்கப்படவேண்டும் என்று ஜாக்சன் மார்டனை வற்புறுத்தினர். அதற்கும் மார்டன் ஒப்புக்கொள்ளவேண்டியதாயிற்று. கண்டுபிடிப்பு இருவருடைய ஒத்துழைப்பினுலும் ஏற்பட்டது என்றபடி உரிமைத்தாள் எழுதப்பட்டு மார்டனது மயக்க மருந்து முறை நவம்பர் மாதம் 12 ம் நாள் உரிமையாக்கப்பட்டது.

ஒரு ரகசிய மருந்தைக்கொண்ட ரணமருத்துவ முறை உரிமையாக்கப்பட்டதை கண்டித்து மற்ற மருத்துவர்கள் அறிக்கைகள் வெளியிட்டனர். ஆனுல் மார்டன் எதிர்பார்க்காதது ஒன்று நடைபெற்றது. மார்டன் தனது முறையை உரிமையாக்கியதும் மாசாச்சுசெட்ஸ் மருத்துவ விடுதியினர் மார்டன் முறையைக் கைவிட்டனர். அம்முறை உரிமையாக்கப்பட்டது ஒருபுறமிருக்க, மார்டன் அந்த மருந்தின் உண்மைப் பெயரை வெளியிட மறுத்ததே முக்கிய காரணமாகும். மார்டன் தனக்குப் பாதகமாகச் சூழ்நிலை வளர்வதை உணர்ந்தார்.

நவம்பர் 5ம் நாளன்று மாசாச்சுசெட்ஸ் மருத்துவர்களிடம் சென்று தனதுமுறையைப் பற்றியசகல உண்மைகளையும் தெரிவிப்பதாகக் கூறினர். இதற்குச் சம்மதித்து மறுபடியும் அம்முறையைக் கையாளுவதற்கு ஏற்பாடாயிற்று. மார்டன் தனது மருந்து ஈதர்தான் என்பதைத் தெளிவாக்கினர். (ஆனல் அங்கிருந்த பிகிலோ (H. J. Bigelow) என்பவர் அதற்கு முன்பே, மார்டனது ரகசிய மருந்தை, பல ஆராய்ச்சிகள் செய்து சல்பூரிக் ஈதராகத்தான் இருக்கவேண்டும் என்ற முடிவிற்கு வந்தார்). கடைசியாகமார்டன் தனது கண்டுபிடிப்பின் உண்மையைக்கூறி முறையைத் தெளிவாக்கினர்.

ஈதர் மயக்க மருந்தின் கண்டுபிடிப்பு பற்றியும் அதைப் பயன்படுத்தி நிறைவேற்றிய ரண மருத்துவம் பற்றியும் பிகிலோ நவம்பர் மாதம் 9ம் நாள் போஸ்டன் மருத்துவ வளர்ச்சிக் கழகத்தின் (Boston Society of Medical Improvement) முன்னிலையில் ஒரு அறிக்கையை படித்தார். அந்த அறிக்கையின் நகல் ஒன்று அமெரிக்க அறிவியற், கலை கழகத்திற்கும் (American Society of Art and Sciences) அனுப்பப் பட்டது. மேலும் அறிக்கை மருத்துவ பத்திரிகைகளிலும், செய்தித் தாள்களிலும் வெளியிடப்பட்டன

இதற்கிடையில் வெளியூர் சென்றிருந்த ஜாக்சன் போஸ்டன் நகர் வந்து சேர்ந்தார். மயக்க மருந்து ரணமருத்துவ முறையை, எதிர்த்துக் கிளம்பிய கிளர்ச்சி அடங்கி அதற்கு ஆதரவு வளர்வதை ஜாக்சன் உணர்ந்தார். அமெரிக்கா மட்டுமல்லாமல் வெளியுலகமும் இதனை போற்றும்படியான சூழ்நிலை உருவாகியது. இதனல் மார்டனது புகழே அதிகம் பரவும் என்று உணர்ந்த ஜாக்சன் நவம்பர் 15ம் நாள், எடியிடம் சென்று, மார்டனுக்கு யோசனை கூறியதோடல்லாமல், தன்னுடைய கட்டளைகளின் படியே மார்டன் வேலைகளை செய்தார் என்று கூறினர். இதைக் கூறிவிட்டு புதிதாக எடுக்கப்பட்ட ஐரோப்பிய நாட்டின் தனியுரிமையில் தனக்குப் பங்குவேண்டுமென வற்புறுத்தினர்.

எடி, ஜாக்சனின் வேண்டுகோளை நிராகரித்ததோடு, ஜாக்சனின் கூற்றை சந்தேகித்தார். இதைக்கேட்டு ஜாக்சன், அன்று கிளம்பும் அஞ்சற் கப்பலில்தானே கண்டுபிடிப்பிற்குரியவன் என்ற செய்தியை அனுப்புவதற்கான ஏற்பாடுகள் தயாராகிவிட்டன என்று கூறினர். அந்தச் செய்தி ஐரோப்பா சென்றால் மார்டன் எடுத்த தனியுரிமை பாதிக்கப்பட்டு அழிந்துபோகும் என்பது உறுதி. அதனல் எடி, ஜாக்சன் அப்படிப்பட்ட செய்தியை அனுப்பாமலிருந்தால் அவர்கேட்ட பணம் கிடைக்குமெனக் கூறினர்.

புதிய ரணமருத்துவ முறைக்கு மார்டன் தனியுரிமைபெற்ற செய்தி எங்கணும் பரவியது அதைக் கேள்விப்பட்ட வெல்சின் நண்பர்கள், மயக்க மருந்துமுறையில் ரணமருத்தும் என்ற கண்டுபிடிப்பில் முதல்வர் என்ற தனது உரிமையை நிலைநாட்டும்படி, வெல்சைத் தூண்டினர்.

அப்போது வெல்ஸ் நோய்வாய்ப்பட்டவராக, தொழிலையும் நடத்தமுடியாமல் ஏழ்மையில் உழன்று வந்தார். மருத்துவத்தொழிலை விட்டுச் சிறிது காலம் வேறுதொழில் மூலம் பொருள் தேட வெல்ஸ் பிரான்ஸ் செல்ல எண்ணங் கொண்டார். அந்தச் சமயத்தில் வெல்சின் நண்பர்கள் பலவாறு கேட்டுக்கொண்டதற் இணங்க, டிசம்பர் மாதம் ஹார்ட்போர்ட் கரண்ட் (Hartford Courant) என்ற செய்தித் தாளுக்கு நீண்டதோர் கடிதம் எழுதி அதில் மயக்க மருந்து முறையில் ரணமருத்துவத்திற்கான, 1844-45 ல் தான் செய்த முயற்சிகள் பற்றிவிரிவாக எழுதினர்.

### அட்டைப்படம்

முதன்முதல் பலர் முன்னிலையில் ஈதரைக் கொடுத்து வேதனையற்ற ரணமருத்துவம் கைகூடான ஒன்று என்று தெரிவித்த மார்டனுக்கு, ஈதரின் மயக்க நிலைத் தன்மையை எடுத்துரைத்த அறிவியலறிஞர் "சார்லஸ் தாமஸ் ஜாக்சன்."





# அண்டசராசரம்

(50)

## நாரத அவதாரம்

நாரதர் பிரமபுத்திரர்களில் ஒருவராக முன்பு கூறப்பட்டது. புராணங்களில் பலவற்றில் அவ்வாறு உள்ளது. ஆனல் பாகவத புராணத்தில், விட்டுணுவின் அவதாரங்களில் ஒன்ருக நாரதர் குறிப்பிடப்படுகிருர். "முனிபுங்கவர்கள் பரம்பரைகளை உண்டாக்க நினைத்த விட்டுணுமூர்த்தி, மூன்ருவது அவதாரமாக நாரதர் உருவத்தில் வந்தார்." என்று பாகவதம் கூறுகிறது.

பாகவதக் கதைப்படி, நாரதர் முதற்பிறவியில் ஒரு ஆசிரமத்தில் பிறந்தார். அவருடைய தாய், தவஞ்செய்து கொண்டிருந்த முனிவர்களுக்கு வேலைக்காரியாக இருந்தாள். காட்டில் முனிவர்களுக்குப் பணிப் பெண்ணுக இருந்த அவளுக்குக் குழந்தை பிறந்தது. (தந்தையைப்பற்றிப் புராணம் எதுவும் சொல்லவில்லை.) குழந்தை ஆசிரமத்தில் வளர்ந்தது. முனிவர்களும் அந்தக்குழந்தையை அன்புடன் பாதுகாத்தார்களாம். சிறுவயதிலேயே, அந்தப்பையன் முனிவர்களுக்குப் பணிவிடைகள் செய்வதில் ஈடுபட்டிருந்தான். முனிவர்களுக்கும், அந்த வேலைக்காரப் பையனைப் பிடித்திருந்தது.

ஒரு நாள், முனிவர்கள் சாப்பிட்டு முடிந்ததும், அவர்கள் இலைகளில் விட்டுப்போன எச்சில் உணவைச் சாப்பிடப் பையனுக்கு அனுமதி கிடைத்ததாம்! உயர்ந்த சாதியினர் சாப்பிட்டு மிகுந்த உணவைக்கூடத் தாழ்ந்த குலத்தவர்களுக்குக் காட்டாமல், குழிவெட்டி மூடவேண்டுமென்பது சாத்திரவிதி. ஆதலால் எச்சில், உணவைச் சாப்பிட வேலைக்காரப் பையனுக்கு அனுமதி கிடைத்ததும், தான் அதுகாரும் செய்துவந்த தொண்டிற்கான பலன் என்று நினைத்து, பையன் மிகவும் மெய் சிலிர்த்து, முனிவர்களின் பாதங்களை வணங்கி, எச்சிலுணவை மிகப் பக்தி சிரத்தையுடன் சாப்பிட்டானும். முனிவர்கள் விட்டுவைத்த எச்சிலுணவைச் சாப்பிட்டதால், அதுவரை அந்தப்பையனைப் பிடித்திருந்த பாவங்களெல்லாம் தொலைந்தனவாம். தாழ்ந்த குலத்தான் கூட, தனது பாவங்களைத்தீர்க்க நல்லமுறையல்லவா அது? எச்சிலுணவால் புனிதமடைந்த பையன், அதிலிருந்து முனிவர்களின் உபதேசங்களில் ஈடுபட்டு, அரியின் சிறந்த பக்திமானுனன், அரிநாமத்தை முனிவர் பாடிடும் பொழுது, சிறுபையனும் பக்கத்தில் இருந்துகேட்டு உளம்பூரிப்பான்; பக்திக் கதைகளைக்கேட்டு அவன் நெஞ்சு பக்குவமடைந்தது.

ஒரு நாள் முனிவர்கள் அந்தக் காட்டைவிட்டு வேரிடம் சென்றுர்கள். போவதற்கு முன், பையனை ஆசிர்வதித்து, வேதசாரத்தை அவனுக்குச் சொல்லிவிட்டுப் போனர்கள். தாயைவிட்டுப் பிரியக்கூடாது என்பதற்காக, பையன் பின்தங்கிவிட்டான். ஒரு நாளிரவு, தாய் எழுந்து வெளியில் வரும் பொழுது, பாம்பின்மீது அடிவைக்க, அதனல் கடிக்கப்பட்டு இறந்தாள். தாய் இறந்ததைப் பார்த்த பையன், "பக்தர்களின் நன்மையைப் பரிபாலிக்கும் விட்டுணுவின் கருணையே, கருணை!" என்று பகவானைத் துதித்துவிட்டு,

தேசயாத்திரை கிளம்பி, வடக்குநோக்கிச் சென்றான். நாடு நகரங்கள், காடு மலைகளைக் கடந்து, தூரவடக்கில் ஒருகாட்டில் பையன் அமர்ந்து கடுந்தவம் செய்தான். தவத்தைக் கண்டு மெச்சிய விட்டுணு அவனுக்கு எதிரில் தோன்றி, பூதவுடல் அழிந்ததும் தன்னை அடையுமாறு வரமளித்து மறைந்தார்.

சிறுவன் அரியின் பெயரை உச்சரித்துக் கொண்டே, உலகத்தின் மீதிருந்த பாசத்தை அறுத்து வாழ்ந்தான். கடைசியாக இறக்கும் நேரம் வந்ததும், பூதவுடலைக் கழற்றி, விட்டுணுமூர்த்தியிடம் அவன் ஆத்மா சேர்ந்தது. பின் விட்டுணுவின் அம்சத்துடன் சேர்ந்து, பிரமாவிற்குள் புகுந்து, சிருட்டிகாலத்தில் நாரதராகவும், மரிசிபோன்ற பிரமபுத்திரர் காளாகவும் தோன்றினர்.

விட்டுணு அவதாரங்களில் ஒன்றாக நாரதரைப் பாகவதம் கூறிவிட்டது. ஆனல் நாரதரைப் பற்றி வருகிற மற்ற புராணககதைகளில் இந்த அவதாரம் ஏற்றுக்கொள்ளப் படவில்லை. விட்டுணு நாரதரைத் தண்டித்த கதைகளும், கிருட்டிணனைக் கண்டு நாரதர் மோகித்துப் பெண்ணுகமாறிப் பிள்ளைகள் பெற்ற கதைகளும் பல இருக்கின்றன. முக்கியமான பத்து அவதாரங்களில் நாரத அவதாரம் சேர்க்கப் படவில்லை.

## நர நாராயணர்

விட்டுணுவே நரநாராயணர் என்று இரண்டு அம்சங்களில் அவதாரம் செய்தாராம். தருமப் பிரசாபதி என்ற முனிவர் தக்கனுடைய புதல்வியர் பதின்மூன்று பேர்களை மணந்திருந்தார். பதின் மூன்றாவது மனைவியான மூர்த்தி என்பவளிடம், விட்டுணு நரநாராயணராக அவதரித்தாராம். நரநாராயணர்கள் பத்திரிகாசிரமம் சென்று கடுமையான தவத்தில் ஈடுபட்டனர். அவர்கள் விட்டுணுவின் அம்சம் என்பது அறியாத இந்திரன், அவர்களுடைய அகோரத்தவத்தால் தனது பதவிக்கு ஆபத்து வந்துவிடுமென அஞ்சி, அவர்களின் தவத்தைக் கலைக்குமாறு மன்மதனையும், தேவமாதர்களையும்அனுப்பிவைத்தான். அவர்களுக்கு உதவியாக வாயுதேவனும், வசந்தமும் சென்றனர்.

மனிதனும் தெய்வகன்னியர்களும் பத்ரிகா சலம் வந்து, தவஞ்செய்துகொண்டிருந்த நரநாராயணர்களை மயக்கப்பார்த்தனர். மாரன் மலரம்புகளை வீசினன் மங்கையர் ஆடிப்பாடி அழைத்தனர்; அப்பொழுது வாயு வீசி அந்த ஆடலழகிகளின் ஆடைகளை விலகும்படி செய்தான். நரநாராயணர்கள் மனங் குலையாமல் இருந்தனர். தெய்வகன்னியரின் தொந்தரவு பொறுக்கமுடியாமல் நர நாராயணர்கள் கோபங்கொண்டு, அந்தப் பெண்களின் கர்வத்தை அடக்க எண்ணி, தமது தொடையைத் தட்டினர்கள். அங்கிருந்து ஊர்வசியும் மற்றும் அழகிய பெண்கள் பலர் உருவெடுத்தார்கள். அவர்களின் அழகுகண்டு, தேவ மாதர்கள் கர்வபங்கமடைந்து தலைகுனிந்து நின்றார்கள். தொடைஎன்பதற்கு ஊரு என்று வடமொழியில் வருதலால், தொடையில் (ஊருவில்) பிறந்தவள் ஊருவசி எனப் பெயர் பெற்றாள்.

நர நாராயணர்களை மயக்கமுடியாமல், மன்மதனும் வாயுதேவனும் தெய்வமாதரும் கலக்கத்துடன் நின்றபொழுது தவக்கோலத்திலிருந்த நர நாராயணர்கள் கண்விழித்து "ஓ! பலம் பொருந்திய மன்மதனே! ஓ வாயுதேவனே! ஓ, தெய்வமாதர்களே! ஓ, தேவர்களே! எங்கள் ஆசிரமத்தில் தங்கி எங்களுடைய உபசாரத்தை ஏற்றுக்கொள்ளுங்கள் என்று சொன்னார்கள்.

தேவர்கள் உணர்ந்துகொண்டார்கள், தவக்கோலத்திலிருப்பவர்கள் அரிபரந்தாமனின் அவதாரமென்று, உடனே "அபசாரம், அபசாரம்!" என்று காலடியில் விழுந்து வணங்கினார்கள். ஆசிரமத்தில் தங்கச் செய்தார்கள். நரநாராயணர்களால் தோற்றுவிக்கப் பட்ட ஊர்வசியும் மற்ற அழகிகளும் வந்திருப் போர்கள் மனங்குளிரும் விதத்தில் உபசாரம் செய்தார்கள். தேவர்கள் மயங்கிவிட்டனர், தேவமாதர்கள் தலைகுனிந்தார்கள். ஒவ்வொரு அழகியைப் பார்த்தாலும் இலட்சுமி தேவியின் பிரதிபிம்பம் போலிருந்ததாம்.

நரநாராயணர்களைத் தரிசிக்கக்கூட நேரமின்றி, ஆசிரமத்துப்பணிப் பெண்களைப் பார்த்தபடி தேவர்கள் இருந்தாகள். இதைக் கவனித்த நரநாராயணர்கள் தேவர்களைப் பார்த்து "உங்களுடைய சுவர்க்கலோகத்துக்கு ஒரு அழகியை நீங்கள் தேர்ந்தெடுத்துக்கொண்டு சொல்லலாம்!" என்று சொன்னார்கள். தேவர்கள் கூடி ஒரு முகமாக ஊர்வசியைத் தேர்ந்தெடுத்தார்கள். நரநாராயணர்கள் ஊர்வசியைத் தேவலோகம் போகச் செய்து, மற்ற பெண்களைக் கிருட்டிணவதாரத்தில் தன்னைச் சந்திக்கும்படிக் கட்டளையிட்டு எல்லோரையும் போகச்செய்தார்.

நரநாராயணர்களே பின்பு அர்ச்சுனனாகவும், கிருட்டிணனாகவும் அவதரித்ததாகப் பாகவத புராணம் கூறுகிறது.



## கபிலர்

பிரமனுடையநிழலில் கர்த்தமபிரசாபதி என்பவர் பிறந்தார். அத்தகைய கர்த்தமபிரசாபதிக்குப் புதல்வராக, விட்டுணுமூர்த்தி அவதரித்தார். அந்த அவதாரத்தில் அவருக்குப் பெயர் கபிலர். அவருடைய தாய் தேவபூதி என்பவள் முதல் மனுவின் மகள். கபிலர் சிறுவயதிலேயே சகல சாத்திரங்களையும் படித்து, சிறந்தஞானியானர். தேவபூதி முதுமையடைந்ததும், கபிலர் தமக்குத்தெரிந்த தத்துவ சாரத்தை அவளுக்கு உபதேசித்தாராம். மகனின் தத்துவத்தைக் கேட்டதால், தாய்க்கு முக்திகிடைத்ததாம். பின் கபிலர் வடதிசை நோக்கிப்போய், சமுத்திரத்தின் மத்தியில் தவம் செய்தாராம். அதற்குப்பின், பாதாளம் போய் கபிலமுனிவர் கடுமையான தவத்தில் ஈடுபட்டார். அப்போதுதான், பகீரதனின் முன்னோர்கள் அசுவமேதக் குதிரையனுப்ப, இந்திரன் அதைத்திருடிச்சென்று கபிலமுனிவருக்குப் பின்னல் கட்டிவைத்தான். குதிரையைத் தேடிவந்த அரசகுமாரர்கள். கபிலமுனிவருக்குப்பக்கத்தில் குதிரை இருப்பதைக் கண்டு, அவர்தான் திருடியிருக்கவேண்டுமென்று கபிலமுனிவரைத் துன்புறுத்தினர்கள். கபிலமுனிவர் விழித்துப் பார்க்க, அரசகுமாரர்கள் எரிந்து சாம்பலானர்கள்.

சாங்கியம் என்ற தத்துவம் கபிலமுனிவரால் உண்டாக்கப்பட்டது என்று சொல்லுவார்கள் சாங்கியம் என்பது அறுவகைப்பட்ட இந்து வேதாந்தங்களில் ஒன்று. கடவுள் என்று ஒன்று இருப்பதாக சாங்கியம் ஏற்றுக்கொள்வதில்லை. இது நிரீசுவர மதமெனவும் வழங்கப்பட்டது. நிரீசுவரம் என்றால் ஈசுவரன் இல்லாதது என்று பொருள்படும். விட்டுணுவின் அம்சமாக கபிலர் ஒருவர் இருந்தாரா இல்லையா என்பது தெரியாது. விட்டுணுவின் அவதாரங்களைக் கூறுகிற புராணக்கதையில் அது ஒன்று. புராணக்கதைகளில் எவ்வளவு கற்பனைகளும் புனைவும் இருக்க முடியுமோ அந்த அளவு விட்டுணு அவதாரங்களில்இருக்கின்றது. ஆனல் சாங்கியம் என்ற வேதாந்தம் இருக்கிறது. அதை இயற்றிய கபிலர் மிகவும் புகழ்பெற்றவராக-மக்களால் மதிக்கப் பட்டவராக இருந்திருக்கலாம். பிற்காலத்தில் புத்தர் கொள்கைகள் இந்து மதத்தினருக்கு மாறுபட்டனவாக இருந்தபோதிலும்; புத்தருக்கு மக்களிடையே செல்வாக்கு இருந்த காரணத்தால், புத்தர் விட்டுணுவின் அவதாரமாக்கப்பட்டதுபோல, சாங்கியவேதாந்தம் கடவுளை மறுப்பதாக இருந்தபோதிலும் அதை உண்டாக்கிய கபிலருக்கும் அந்தக்கொள்கைகளுக்கும் செல்வாக்கு வந்த காரணத்தால் கபிலர் என்பவர் கபிலமுனிவராகவும் விட்டுணு அவதாரமாகவும் ஆக்கப்பட்டுவிட்டார். விட்டுணுவே அவதாரமெடுத்து, கடவுள் இல்லையென்று ஏன் கூறவேண்டும்;

புராணத்தில் வரும் கபிலருக்கும், சாங்கிய மதம் இயற்றிய கபிலருக்கும் வேறுபாடுண்டு, புராணத்தில் வரும் கபிலரைத்தவிர, கபிலர் என்ற பெயருடன் பலர் இருந்திருக்கின்றனர். சாங்கியமதத்தை உண்டாக்கிய கபிலர் ஒருவர் சங்ககாலத்தில் அகமும் புறமும் பாடிய அருந்தமிழ்ப் புலவர்களில் சிறந்தவராக விளங்கிய கபிலர் வேறு, புராணகாலத்தில் கூறப்படும் கபிலர் வேறு, கபிலர் என்ற பெயரில் பலர் இருந்திருக்கின்றனர். இவர்களையெல்லாம் விட்டு புராணத்தில் வரும் கற்பனை வேறு.

## தத்தாத்ரேயர்

பிரம புத்திரர்களின் அத்திரி முதல்வர். அவருடைய மனைவியான அநசூயை என்பவள், பிரமனுடைய மானச புத்திரர்களில் ஒருவரான தக்கனுடைய மகள். அநசூயை தனக்கு அண்ணன் முறையான அத்திரிக்கு மனைவியானள். கன்னிகாதானம் பெற்றதும், அத்திரி தன் மனைவியை அழைத்துக்கொண்டு மலைக்குச் சென்றார், தவஞ்செய்ய.

மலைச்சாரலில் அடர்ந்த காட்டில் அத்திரி முனிவர் அகோரத்தவத்தில் ஈடுபட்டார். வெய்யலென்றும் குளிரென்றும் பாராமல், ஒற்றைக்காலில் நின்றபடி, 'அத்திரி முனிவர் நூறு ஆண்டுகள் கடுமையாகத் தவம் செய்தாராம். அவர் செய்த தவத்தின் கடுமையால் அவர் மண்டையிலிருந்து அக்னி கிளம்பி, மூன்று உலகங்களையும் சுட்டதாம். தேவர்கள் கவலைப்பட்டார்கள். அத்திரியின் தவத்தை நிறுத்த வேண்டி மும்மூர்த்திகள் கிளம்பி, அவர் தவஞ்செய்யும் மலைச்சாரலுக்கு வந்தார்கள். மும்மூர்த்திகளின் புகழைப் பாடிக் கொண்டு, அப்சரசக்கன்னியர்கள், இருடிகள், கந்தருவ வித்தியாதரர்கள் வந்தார்கள். கண்ணை மூடிக்கொண்டு இருந்த அத்திரி முனிவரின் மனதில் பெரிய வெளிச்சம் தோன்றியதாம். கண்ணைத் திறந்து பார்த்த பொழுது, மும்மூர்த்திகள் நின்றுகொண்டிருந்தார்கள். அத்திரிமுனிவர் தெண்டனிட்டு வணங்கி மலர்களால் பூசைசெய்தார். அத்திரி முனிவருக்கு ஒரு சந்தேகம் வந்து விட்டதாம். அவர் நினைத்துத் தவஞ்செய்தது ஒரு கடவுளை. ஆனல் எதிரே வந்திருப்பது

மூன்று கடவுள்கள். "மும்மூர்த்திகளே! பிள்ளைவேண்டுமென்பதற்காக முழுமுதற் கடவுள் ஒருவரை நினைத்து நான் தவமிருந்தேன். பிரம, விட்டுணு சிவனுகிய நீங்கள் மூவர்கள் காட்சியளித்தீர்கள். உங்களில் யார் உண்மையான முதற்கடவுள்?" என்று அத்திரி கேட்டாராம். ஆக அவர் தவஞ் செய்ததின் காரணமும் தெரிந்துவிட்டது. பிள்ளை வேண்டுமென்பதுதான்! ஒரு கடவுளுக்குத் தவஞ்செய்யப் போக மூன்று கடவுள்கள வரம்கொடுக்க வந்துவிட்டார்கள்.

கடவுள்கள் சிரித்தார்களாம், "ஓ, முனிவரே! நீர் வேண்டிய ஒரே கடவுள்தான் நாங்கள் மூன்றுபேர்களும்! நீர் நினைத்த கோரிக்கை நிறைவேற்றப்படும். நீர் கேட்ட வரம் மிக மேலானது. எங்கள் அம்சமாக மூன்று குழந்தைகளை உம் மனைவி பெறுவாள். அதற்கு நாங்கள் வரந்தருகிறோம். உமக்கு மங்களமுண்டாகுக!"

மும்மூர்த்திகள் தந்த வரத்தைக் கேட்டு, அத்திரியும் அநசூயையும் ஆனந்தமடைந்தார்கள். மும்மூர்த்திகளின் அருளினல், மூன்று குழந்தைகள் பிறந்தன. பிரமாவின் அம்சமாக சோமனும், விட்டுணுவின் அம்சமாய் தத்தாத்ரேயனும், சிவனுடைய அம்சமாக துர்வாசனும் குழந்தைகளாகப் பிறந்தனர்.

மும்மூர்த்திகள் அநசூயைக்குக் குழந்தைகளாக வந்ததை வேறொருவிதமாகவும் கதைகள் கூறுகின்றன. மும்மூர்த்திகள் ஒருதடவை அத்திரியின் ஆசிரமத்துக்கு வந்தார்களாம். அப்பொழுது அத்திரிமுனிவர் அங்கு இல்லை. வந்த அதிதிகளை அநசூயை வரவேற்று உபசரித்தாளாம். அதிதிகள் முனிபத்தினியின் உபசாரத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. பேசாமல் உட்கார்ந்திருந்தார்கள். அதிதிகளுக்கு அன்னமிட அநசூயை அன்னமென வந்தாள். மும்மூர்த்திகள் வேண்டாமென மறுத்தனர். தான் வரவேற்று உபசரித்ததில் ஏதோ குறை நேர்ந்துவிட்டதென அநசூயை அஞ்சி—ஏனென்றுல் அதிதிகள் மனம் நோக பத்தினிகள் ஏதும் செய்யக்கூடாது "ஓ, அதிதிகளே! என்ன குறை நேர்ந்தது? அடியாளை மன்னித்துத் தெரிவிக்கவேண்டும்" என்று வேண்டிக் கொண்டாள்.

மும்மூர்த்திகள் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டனர். பிரமா சொன்னர் "ஓ, முனிபத்தினியே! நிர்வாணமாக வந்து நீ பிட்சையிட்டால்தான் நாங்கள் ஏற்றுக்கொள்வோம்.

அதிதிகளை உபசரிக்கும் பொழுது, ஆடை அணிகளுடன் இருந்ததுதான் தவறுனதாகக் கருதப்பட்டது போலும்!

அதிதிகளின் வேண்டுகோள் அநசூயையைத் திடுக்கிட வைத்தது.

மும்மூர்த்திகள் கேட்டதுகூட காமநோக்கத்துடன் அல்ல-காமம் முதலிய கடும்பாவங்களுக்கு அப்பாற்பட்டவர்களல்லவா அவர்கள்-அவர்கள் கேட்டது; அநசூயையைச் சோதிக்க-அதிதிகளை உபசரிப்பது எப்படியிருக்கவேண்டும் என்பதை நிரூபிக்க! இவ்வாறு புராணகாரர்கள் சமாதானம் கூறுவார்கள்.

அதிதிகளின் வேண்டுகோளை நிறைவேற்ற வேண்டும். அதேசமயத்தில்தான் அவமானம் அடையவுங்கூடாது என்று நிச்சயித்த அநசூயை மூன்று அதிதிகளையும் மூன்று குழந்தைகளாகும்படி வேண்டிக்கொண்டாள். அவளுடைய வாக்குப் பலித்தது. அநசூயை ஆடையணிகளை நீக்கி, நிர்வாணக்கோலத்தில் மீண்டும் வந்தபொழுது மூன்று அதிதிகளும் மூன்று குழந்தைகளாக இருந்தனர்; பசியால் துடித்த குழந்தைகளை எடுத்து அநசூயை பாலமுதம் வழங்கினுள். அத்திரி திரும்பிவந்த பொழுது, ஆசிரமத்தில் மூன்று குழந்தைகள் இருந்தன. குழந்தைப் பேறில்லாது வருந்திய அத்திரி மூன்று குழந்தைகளையும் சீராட்டி அநசூயையைப் பாராட்டினுர்.

தத்தாத்திரேயர் பிறப்பு மற்றெரு விதமாகவும் கூறப்படுகிறது. விட்டுணு அத்திரியின் உடம்பினுள் புகுந்து, அநசூயைக்குக் குழந்தையாகப்பிறந்து, பின் தாய் பாலுண்ண தத்தாத்திரேயர் என்று பெயர் வந்ததாம். இந்தக் கதையில் மும்மூர்த்திகள் வரவில்லை. விட்டுணுமட்டும் அத்திரியின் பிள்ளையாகப் பிறந்தார். கதைகள் மூன்று நான்கு, முரண்பட்ட விதத்தில் இருந்தபோதிலும், அநசூயையின் குழந்தையாகத் தத்தாத்திரேயர் வளர்ந்தார், அவர் விஷ்ணுவின் அம்சமாக இருந்தார் என்ற அளவில் மட்டும் புராணக்கதைகள் ஒன்றுபடுகின்றன.

விட்டுணுவின் அவதாரமான தத்தாத்திரேயர், சிறுவயதில் தவஞ்செய்ய விரும்பி, தனிமையாகச் சென்றுராம். இவரைப்போன்ற மற்ற முனிவர்களின் பிள்ளைகளும்-ஆசிரம முனிவர்களுக்கு பிள்ளைகள் ஏராளம். தவம் வளர்ந்ததோ என்னவோ, பிள்ளைகளின் எண்ணிக்கை வளர்ந்தபடி இருந்தது.







# நோயும் மருந்தும் அவளே!

[இரா. நெடுஞ்செழியன்]

விடியற்காலம்! வெளிச்சம் மலரமலா இருள் சிறிதுசிறிதாக நீங்கிக்கொண்டிருக்கிறது! கார் எருமைகள் இனியபாலை நிரம்பக் கறக்க வேண்டும் என்று கருதி, மாடுமேய்க்கும் இளஞ்சிறுவர்கள், அவற்றைத் தொழுவத்திலிருந்து அவிழ்த்துவிட்டு, நீர்நிலைக்கு ஓட்டிச் செல்லுகிருர்கள். கன்றுகளெல்லாம் தொழுவத்திலேயே கட்டிவைக்கப்படுகின்றன. மாடுகளை ஓட்டிச்செல்லும் சிறுவர்கள், மகிழ்ச்சி மேலீட்டால், மாடுகளின் முதுகின்மேல் ஏறி உட்கார்ந்துகொண்டு, வேடிக்கைப்பாட்டுக்கள் பாடிக்கொண்டு செல்லுகிருர்கள். இப்படியாக அவரவரும் விடியற்காலத்தே தாம்தாம் செய்யவேண்டிய கடமைகளில் கவனஞ் செலுத்தி அவற்றில் ஈடுபடுகின்றனர்.

அச்சிற்றூரிலுள்ள கட்டழகி ஒருத்தியும் நீராடுதற்பொருட்டு, விடியற்காலத்தே எழுந்து சோலைப்பக்கமாக நீர்த்துறையை நோக்கிச் சென்றுகொண்டிருக்கிருள்.

அச்சிற்றூரிலே உள்ள ஆணழகன் ஒருவன் அவளிடம் நீண்டநாட்களாகக் காதலன்பு செலுத்தி நட்புறவு கொண்டாடி வருகிறுன். அவர்கள் இருவரும் இரவுக்குறி பகற்குறி இடங்களை ஏற்பாடுசெய்துகொண்டு நெடுநாள் களவொழுக்கத்திலே ஈடுபட்டு வந்தனர். தலைவியின் வீட்டிலுள்ளாரின் கட்டுக்காவலின் காரணமாகத் தலைவி இரவுக்குறி, பகற்குறியிடங்களுக்கு விரும்பியவாறு செல்ல முடியாமற்போகிறது. தலைவியைக் காண முடியாமற்போகும் தலைவன், அவளை எப்படியேனும் காணவேண்டும் என்று துடிதுடிக்கிருன். தலைவி இப்பொழுதெல்லாம் தன்னைக் காணவராமலிருப்பதற்குக் காரணம், தன்னை அவள்வெறுத்துவிட்டாளோ அல்லது தன்னிடம் அருவருப்புக்கொண்டுவிட்டாளோ அல்லது தனக்கு அவளிடம் அன்பில்லை என்று தவருகக் கருதிக்கொண்டுவிட்டாளோ என்றெல்லாம் எண்ணி அவன் ஏங்குகிறுன். எப்படியும் தலைவியை எங்கேயேனும் கண்டு அவளிடம் தன்னிலையையும், தன்னுள்ளன்பையும் தெளிவுபடுத்திவிடவேண்டும் என்று முடிவுசெய்து கொள்கிருன். அவளை எங்கே காணலாம் என்று நெடுநேரம் சிந்தித்து, இறுதியில் விடியற்காலையில் அவள் நீராடச் செல்லும்போது, சோலைப்பக்கம் சென்றிருந்து அவளைக் காணுவது; அப்போது பலரும் தம்மைக் காணும்படியான வெளிச்சம் இருந்தாலும் அதைப்பற்றிக் கவலையில்லை என்ற துணிவோடு சோலைப்பக்கம் சென்று தங்கி மறைந்திருக்கிருன். தன்னுடைய காதலன்பு என்றென்றும் அவள்பால் உண்டு என்பதை நிலைநாட்ட வேண்டித் தன்னுடன் கண்கவரும் தழைகளினுலாய அழகிய உடையினையும், நறுமண மலர்களால் ஆன மாலையையும் எடுத்துச்சென்றிருக்கிருன்.

தலைவி மெல்ல நடந்துவரும்போது, வேறு யாருடைய நடமாட்டமும் இல்லாத இடமாகப் பார்த்துத் தலைவன் திடீரென்று மறைவிலிருந்து வெளிப்பட்டுத் தலைவிமுன்வந்து நிற்கிருன். தலைவி, தலைவனைக்கண்டதும் அச்சமும் வியப்பும் அடைந்து திடுக்கிட்டுப் போய்விடுகிருள். தலைவி தம்மை வேறு யாரேனும் பார்த்துவிடப்போகிருர்களோ என்று அச்சப்பட்டுக்கொண்டு சுற்றுமுற்றும் திரும்பிப் பார்க்கிருள். யாரும் தம்மைப்பார்க்கவில்லை என்று அறிந்துகொண்டவுடன், காதலன்புகசிய தலைவனைப் பார்த்துப், புன்சிரிப்புச் சிரித்து, வெட்கத்தால் தலையைக் குனியவைத்துக்கொள்கிருள். தலைவன் அவளை அணுகி ஆரத்தழுவி, அன்புமுத்தங் கொடுத்து, மாலையை அவள் கூந்தலில் சொருகியும், தழையுடையை அவள் இடுப்பில் கட்டியும் அழகு பார்க்கிருன்.

"அன்பே! ஏன் இவ்வளவு நாட்களாக என்னைக்காண நீ வரவில்லை? என்மீது ஏதேனும் மனவருத்தமா?" என்று தலைவன் தலைவியின் தலையைத் தடவிக்கொடுத்துக் கொண்டே கேட்கிருன்.

"அத்தான்! உங்கள்மீது எனக்கு மனவருத்தம் ஒன்றுமில்லை. என் வீட்டில்

எனக்குக் கட்டுக்காவல் மிகுதியாகப்போட்டு விட்டதால், குறியிடங்களுக்கு வருவதற்கு என்னால் இயலவில்லை. அவ்வளவுதான்!'' என்று அவள் விடைகூறுகிறாள்.

"என்னை நீ வெறுத்துவிடவில்லையே?''

"எப்படி உங்களை நான் வெறுத்துவிட்டு உயிர்வாழமுடியும்?''

''இனி குறியிடங்களுக்கு வருவாயா? நான் வந்து காத்திருக்கட்டுமா?''

"அன்னை எப்பொழுதும் என்னைக் கண் காணித்துக்கொண்டிருப்பதால், நான் குறியிடங்களுக்கு வருவது அவ்வளவு எளிதல்ல!''

''பின் எங்குதான் உன்னைக் காண்பது?''

'இந்தவேளையில், இங்குதான் என்னைக் காணமுடியும்! வேறு எங்கும் காண வழியில்லை!''

"அப்படியானால் நாளைக்கு இங்குவருவாயா?''

"வர முயற்சி செய்கிறேன்!''

"முயற்சிப்பதாக இருக்கவேண்டாம்; கட்டாயம் நீ வரவேண்டும். நானும் வருகிறேன்!''

"சரி!'' என்று சொல்லிவிட்டுத் தலைவி நீர்த்துறை நோக்கி நடக்கிறாள். தலைவன் அவ்விடம் விட்டு மறைகிறான்.

தலைவி, தலைவன் காதலன்பின் அறிகுறியாகக் கொடுத்த தழையுடையையும், மாலையையும் மறைத்து வைத்துக்கொண்டு, வீடு சென்றவுடன் தோழியைத் தனியே காண்கிறாள். விடியற்காலம் சோலைப்பக்கம் நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் அவள் தோழியிடம் சொல்லுகிறாள். தோழி அமைதியாகக் கேட்டுக்கொண்டு மகிழ்ச்சி யுறுகிறாள்.

"அவரை நாளைக்காலை சோலைப்பக்கம் காணுவதாகச் சொல்லிவிட்டு வந்துள்ளேன். நாளை காலையும் அந்தப் பக்கம் சென்றால் அன்னை ஐயுறுவாளோ என்று அஞ்சுகிறேன்,'' என்று தலைவி கூறுகிறாள்.

அதற்குத் தோழி, "அன்னை கட்டாயம் ஐயுறவே செய்வாள். அதற்கு நீ என்ன செய்யப் போகிறாய்?'' என்று தோழி கேட்கிறாள்.

"என்ன செய்வதென்று எனக்கு ஒன்றும் புரியவில்லை! நீதான் சொல்லேனடி ஒரு வழியை!'' என்று தலைவி கேட்கிறாள்.

"நான் நல்ல கணவனைப் பெறவேண்டி நோன்பிருக்கப் போகிறேன். அதற்காக நாள் தோறும் நீர்த்துறையில் நீராடி வரப் போகிறேன்' என்று நீ அன்னையிடம் கூறினால், அன்னை உடனே உனக்கு இசைவு தந்து விடுவாள்'' என்று தோழி வழி சொல்லிக் கொடுக்கிறாள்.

தலைவி, மிக்க மகிழ்ச்சியுற்றுத், தோழிசொல்லியவாறே, அன்னையிடம் தன் கருத்தை வெளியிடுகிறாள். அன்னையும் அவள் கருத்துக்கு இசைய ஒப்புதல் அளித்து விடுகிறாள்.

தலைவனும் தலைவியும் சிலகாலம்வரையில் விடியற்காலத்தில் சோலைப்பக்கம் எதிர்ப்பட்டு உரையாடி மகிழ்வதில் காலங் கழித்து வருகின்றனர். தலைவன் திருமணத்திற்கான ஏற்பாடு ஏதும் செய்யாமல் நாள்தோறும் தலைவியைக் கண்டு, உரையாடி மகிழ்ந்திருந்துவிட்டு மட்டும் செல்வது தோழிக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. திருமணத்திற்கான ஏற்பாடுகளை விரைவில் செய்யும்படி தலைவனைத் தூண்டும்படி, தோழி, தலைவியிடம் கூறுகிறாள். திருமணத்தைப்பற்றிய பேச்சை எடுக்க நாணம் தன்னை தடை செய்கிறது என்று தலைவி சொல்லவும், தோழி, தான் அதற்கான வழி காணுகிறேன் என்று கூறுகிறாள்.

ஒருநாள், விடியற்காலையில், தலைவி செல்வதற்கு முன், தோழி சோலைப் பக்கம் செல்கிறாள். தோழி தலைவனை எதிர்ப்பட்டு நிற்கிறாள். தலைவன், தலைவி வராமல் தோழி மட்டும் வந்திருப்பது கண்டு திகைக்கிறான்.

"எங்கே தலைவி? அவள் வரவில்லையா?'' என்று தலைவன் தோழியைப் பார்த்து வினவுகிறான்.

"இல்லை! அவள் வரமாட்டாள்!'' என்று தோழி விடை யிறுக்கிறாள்.

"ஏன்? அவளுக்கு உடல் நலமில்லையா?'' என்று கலக்கத்தோடு கேட்கிறான்.

"உடல் நலம் நன்றாகத்தானிருக்கிறது! ஆனாலும் இனி அவள் வரபாட்டாள்!'' என்று தோழி கூறுகிறாள்.

"ஏன்? என்மீது வருத்தமா?''

"ஆமாம்!''

"என்ன வருத்தம்? நான் ஒரு பிழையும் செய்யவில்லையே!''

"ஏன் நீங்கள் பிழை செய்யவில்லை? செய்திருக்கிற பிழைகளே போதுமே!''



"என்ன பிழை செய்தேன்?''

"நீங்கள்தான் தலைவியைத் திருமணம் செய்துகொள்ள மறுத்து வருகிறீர்களே! இந்தப் பிழை போதாதா?''

"இது ஒரு பிழையா? நான் ஒன்றும் திருமணம் செய்துகொள்ள மறுக்கவில்லையே! சிறிதுகாலம் போகட்டும் என்றுதான்சொல்லி வருகிறேன்?''

"நீங்கள் காலந்தாழ்த்திக்கொண்டுபோவது அவளுக்கு எவ்வளவு வருத்தத்தைத் தருகிறது தெரியுமா?''

"அவள் ஒன்றும் வருத்தப்பட்டதாக என்னிடம் காட்டிக் கொள்ளவில்லையே!''

"அவள் எப்படிக் காட்டிக் கொள்வாள்? நாணம் அவளைத் தடுக்காதா?''

"சிறிதுகாலம் சென்ற பிறகு திருமணத்திற்கான ஏற்பாடுகளை நான் உறுதியாகச் செய்யத்தான் போகிறேன்!''

"நீங்கள் காலந்தாழ்த்துவதைப் பார்த்தால் அவளிடம் உங்களுக்கு அன்பு இல்லை என்றுதான் சொல்ல வேண்டும்!''

"நான் அன்றொரு நாள் காதலன்பின் அறிகுறியாகத் தழையுடையையும், மலர் மாலையையும் கொடுத்ததிலிருந்தே, நான் அவளிடம் கொண்டிருக்கும் அளவற்ற அன்பு வெளிப்படுமே!'' அதை அவள் மறக்க முடியாதே!

"அவளை நீங்கள் ஒரு பொருட்டாக மதிக்கவில்லை என்றுதான் கருதவேண்டியிருக்கிறது!''

"நான் கொண்டுள்ள காதல் நோய்க்குக் காரணமும் அவள்தான்; என்காதல்நோயைத் தீர்க்கும் மருந்தும் அவளையல்லாமல் வேறொன்றில்லை! நான் அவளிடம் எவ்வளவு அன்பு கொண்டிருக்கிறேன் தெரியுமா?''

"உங்களுடைய அன்பை நாங்கள் தெரிந்து கொள்ள வேண்டுமானால், நீங்கள் திருமண ஏற்பாட்டுடன் வந்தால்தான் தெரிந்து கொள்ள முடியும். அதுவரையில் அவள் உங்களைக் காண வரமாட்டாள்!''

"அப்படியானால். நான் திருமண ஏற்பாட்டுடன் வருகிறேன், அஞ்சவேண்டாம் என்று அவளிடம் நீ போய்ச் சொல்!''

"தலைவன் திருமணம் செய்துகொள்ளும் உறுதியுடன் செல்கிறான். தோழி மகிழ்ச்சியுடன் தலைவியிடம் திரும்புகிறாள்.

* * *

இது **நற்றிணை 80** ஆம் செய்யுளின் கருத்தைத் தழுவி எழுதப்பட்ட காதற் காட்சியாகும். இந்தச் செய்யுளை இயற்றியவர் **பூதன் தேவனார்** என்ற புலவராவார். இவர் மருதத்திணையை மிகச் சிறப்பித்து பாடியுள்ளார்; ஈழத்துப் பூதன்தேவனார் என்று வேறொரு புலவரும் இருந்ததாகத் தெரியவருகிறது. இவர் பாடிய பாடல்கள் நற்றிணையில் ஒன்றும், குறுந்தொகையில் ஒன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைக்கப் பெற்றிருக்கின்றன.

**மன்ற எருமை மலர்தலைக் கார்ஆன்**
**இன்தீம் பால்பயன் கொண்மார் கன்றுவிட்டு**
**ஊர்க்குறு மாக்கள் மேற்கொண்டு கழியும்**
**பெரும்புலர் விடியலின் விரும்பிப் போத்தந்து**
**தழையும் தாரும் தந்தனன் இவனென**
**இழையணி ஆயமொடு தருநாண் தடைஇத்**
**தைஇத் திங்கள் தண்கயம் படியும்**
**பெருந்தோள் குறுமகள் அல்லது**
**மருந்துபிறி தில்லையான் உற்ற நோய்க்கே**

[நற்றிணை-80]

[பொழிப்புரை : தொழுவத்திலுள்ள பெரிய தலையையுடைய கார்எருமையின் இனியபாலை நிரம்பக் கரந்துகொள்ளும்பொருட்டு, அவற்றின் கன்றுகளைத் தொழுவத்திலேயே நிறுத்திவைத்து விட்டு, ஊரிலுள்ள மாடு மேய்க்கும் இளஞ்சிறுர்கள், அவ்வெருமைகளின்மீது ஏறிக்கொண்டு தனியே மேய்த்துவருவதற்காகப் போகும் மிக்க இருள்நீங்கும் விடியற்காலத்தில் விருப்பத்தோடு வந்து உடுத்திக்கொள்ளுவதற்குரிய தழையுடையையும், சூட்டிக்கொள்ளுதற்குரிய மாலையையும் இவன் கொடுத்தான் என்று, அணிகலன் அணிந்த ஆயத்தோடு தகுதியுடைய தன்னை வளைக்கப்பட்டு என்னைப் பெறுதற்காகவேண்டி, தான் எடுத்துக்கொண்ட நோன்பின் பயனுகத் தைத்திங்களிலே குளிர்ந்த நீரிலாடுகின்ற பெரிய தோளையுடைய அவ்இளைய மகளே நான்அடைந்துள்ள நோயை நீக்கும் மருந்தாய் அமைந்துள்ளாள் ; அவளையல்லாமல் பிறிதொரு மருந்து இல்லை ; நீ இதனை அறிந்து கொள்வாயாக ! கார்ஆன்-காராம்பசு ; குறுமாக்கள்-இளஞ்சிறுவர்கள் ; போத்தந்து-வந்து ; தழை-தழையுடை, தார்-மலை-]

எந்தத் தலைவி, தலைவனுக்குக் காதல் நோய் ஊட்டக் காரணமாக இருக்கிருளோ, அந்தத் தலைவியேதான் அக்காதல் நோயைத் தீர்க்கும் மருந்தாகவும் அமைந்திருக்கிருள் என்ற கருத்து, இச்செய்யுளில் உணர்த்தப்படும் தன்மை மிகவும் போற்றற்குரியது.

கன்றுகளைத் தொழுவத்திலேயே நிறுத்தி விட்டு, எருமை மாடுகளை மேய்ப்பதற்காக ஓட்டிச்செல்லும் இளஞ்சிறுவர்கள், அவற்றின் முதுகில் உட்கார்ந்துகொண்டு செல்லுகிருர்கள் என்று மருத நிலத்தின் தன்மையை அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிருர் ஆசிரியர்.

காதலின் அறிகுறியாகத் தலைமகன் தலைமகளுக்குத் தழையுடையையும், மலர்மாலையையும் காணிக்கையாகத் தருவது அக்காலப் பழக்கமாக இருந்திருக்கிறது.

ஏதேனும் ஒரு குறிப்பிட்ட செயலை செய்து முடிக்க வேண்டும் என்ற கருத்தோடு நோன்பு மேற்கொள்ளுபவர்கள், தைத்திங்கள் முழுவதும் தண்ணிய நீரோடையில் வைகறைப் பொழுதில் நீராடுவார்கள் என்பது அக்காலப் பழக்கமாக இருந்து வந்திருக்கிறது.

விடியற்காலத்தில் வெளிச்சென்று மேய்ந்து வரும் கறவை எருமைகள் நிரம்பப் பால் கொடுக்கும் என்பது இயல்பாகும் என்று தெரியவருகிறது.

## தமிழ்ப் படிக்காதவர்களுக்கு இடமில்லை !

★

"தமிழ்ப் படிக்காதவர்கள் தமிழ்நாட்டில் வசிக்க யோக்கியதை உடையவர்கள் அல்ல. அவர்கள் எந்த ஊர் பாஷைகளைப் படிக்கிருர்களோ அந்த ஊரே அவர்களுக்குத் தகுந்த இடமாகையால், சுய பாஷையைப் படிக்காமல் இங்கிலீஷ் மட்டும் படிக்கிறவர்களை இங்கிலீஷ் தேசத்துக்கு அனுப்பிவிடுவோம். பிரெஞ்சு மட்டும் படிப்பவர்களைப் பாரீசுப் பட்டணத்துக்கு அனுப்புவோம் ; லத்தீனுக்கும் சமஸ்கிருதத்துக்கும் சொந்த ஊர் இல்லாதபடியால் அந்த பாஷைகளைப் படிப்பவர்களை அநாமகரணத்தீவுக்கு அனுப்புவோம்."

—மாயூரம் முனுசீப் வேதநாயகனுர்.



# நாடகத் தமிழ்

திரு. பி. சம்பந்த முதலியார், பி. ஏ., பி. எல்.

★

நமது தாய் மொழியாகிய தமிழ்மொழி தொன்றுதொட்டு முத்தமிழ் என வழங்கப்பட்டுவருகிறது ; இயல், இசை, நாடகம் எனும் மூன்றுபிரிவுகள் உடைமையால் முத்தமிழ் எனப்பெயர் பெறலாயிற்று. நாடகத்தமிழ் என்று ஒருபிரிவு தமிழ் மொழியில் இருப்பது போல், உலகிலுள்ள மற்றெந்த மொழிகளிலும் நாடகப்பிரிவு என்பது இல்லை. ஆகவே நாடகத்தமிழ் என்பது தமிழ்மொழி ஒன்றிற்கே உரியசிறந்த செல்வமாகும்.

தமிழ் பேசுவதற்கும் எழுதுவதற்கும் உரிய மொழி ஆனதுமுதல் நாடகத்தமிழ் உண்டாயிருக்கவேண்டுமென்று நாம் ஒருவாறு ஊகிக்கலாம். தமிழில்மிகவும் தொன்மையான நூல் தொல்காப்பியம் என்பதாம். அந்நூல் சுமார் 2000 வருடங்களுக்குமுன் இயற்றப்பட்டது என்பதை மொழிஆய்வு அறிஞர் ஒப்புக்கொள்கின்றனர். அந்நூலில் ஒருசூத்திரத்தில் "நாடகவழக்கினும் உலகியல் வழக்கினும்" என்கின்ற சொற்றொடர் வருகிறது. ஆகையால் அக்காலத்திலேயே தமிழ் நாடகம் இருந்திருக்கவேண்டுமென்று நாம் உறுதியாய்க் கூறலாம்.

அப்படி இருந்தும் அக்காலத்தில் எழுதப்பட்ட நாடகம் ஒன்றும் நமக்குக்கிடைக்கவில்லை. சிலப்பதிகாரத்தையும், அதற்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரையையும் காலஞ்சென்ற மஹாமஹோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதஐயர் அவர்கள் தமிழ் உலகிற்கு அச்சிட்டு வெளியிடாவிட்டால், தமிழ் நாடகங்கள் அக்காலத்தில் இருந்தனவோ என்று ஐயப்பட்டிருப்போம். மேற்கண்ட நூல்களில் நமக்குக்கிடைத்துள்ள சில விவரங்களைப்பற்றி இங்குஎழுதுகிறேன்.

தொல்காப்பியர் காலத்திலேயே வள்ளி நாடகம் இருந்ததாக நாம் உறுதியாய்க்கூறலாம். தொல்காப்பியத்தில் ஒருசூத்திரத்தில் "வாடா வயவர் ஏத்தும் வள்ளி" என்னும் சொற்றொடருக்கு அடியார்க்கு நல்லார் உரை எழுதுங்கால் 'வள்ளி என்பது என்னை ?-வள்ளிக்கூத்து' என்றே தெளிவாய் எழுதியிருக்கிருர். ஆகவே வள்ளிக் கூத்தானது அக்காலத்தில் ஆடப்பட்டது என்பதில் ஐயமில்லை. இதன்றிப் 'பாலசரிதநாடகம்' என்னும் ஒருநாடகமும் அக்காலத்தில் ஆடப்பட்டதாக அறிகிறோம். இது கண்ணன் பலராமரோடும் நப்பின்னைப் பிராட்டியாரோடும் செய்த லீலைகளைப்பற்றிய நாடகமாம். இச்சந்தர்ப்பத்தில் நாம் கவனிக்கவேண்டிய ஒரு விஷயம் என்னவென்றால், ஆதிகாலத்து நாடகங்களெல்லாம் மதசம்பந்தமானவைகள் என்பனவேயாம். இங்கிலாந்து முதலிய தேசங்களிலும் முதல் முதலாக ஆடப்பட்ட நாடகங்கள் மதசம்பந்தமானவை என்பது கவனிக்கத்தக்கது. நமது கோயில்களின் உற்சவங்களில் பன்னிரண்டு பதின்மூன்றும் நூற்றுண்டுகளிலும் அநேக இடங்களில் ஸ்தல மகாத்மியக்கதைகளை யொட்டி நாடகங்கள் ஆடப்பட்டன என்று அக்கோயில்களிலுள்ள கல்வெட்டுக்களினுல் நாம் அறிகிரோம். இனி அடியார்க்கு நல்லார் முதலியோருடைய உரைகளினின்றும் பழங்காலத்து நாடகங்களைப்பற்றி நாம் அறியக்கிடக்கும் சில விஷயங்களை ஆராய்வோம். அக்காலத்தில் தமிழ் நாடகங்கள் எவ்வளவு உயர்ந்த நிலையிலிருந்தன என்பதை நாம் ஊகிக்கலாம்.

நாடக மேடைகள் எங்கெந்த இடங்களில் ஏற்படுத்தவேண்டும், அவைகளின் உயரம், அகலம், நீளம் எவ்வாறு இருக்கவேண்டும், அவைகளின்மீது தூண்கள் எப்படி நாட்டப்பட்டிருக்கவேண்டும், திரைச்சீலைகள் எப்படி எப்படிக் கட்டப்படவேண்டுமென்பன போன்ற விவரங்களும், நாடகம் ஆடுபவர்களுக்கு இன்ன இடம், பின்பாட்டுப் பாடுவோருக்கு இன்ன இடம், நாடகத்தைப் பார்க்கவரும் அரசர் முதலிய பெரியோர் உட்கார இன்ன விடம், மற்றும் சாதாரணமக்கள் உட்கார இன்னவிடம் என்பன போன்ற விவரங்களும், அந்நூல்களில் குறிக்கப் பட்டிருக்கின்றன. அவைகளையெல்லாம் பற்றி இங்கு எழுத இடமில்லை. ஓர் உதாரணத்தை மாத்திரம் எடுத்துக் கொள்கிறேன். நாடகமேடையில் விளக்குகளை அமைக்கும்போது அவைகளின்மூலமாக



Filmed as bound.

அருகிலிருக்கும் தூண்களின் நிழல் அரங்கத்தில் ஆடுபவர்கள்மீது விழலாகாது என்று குறிப்பிட்டிருக்கிறது. அன்றியும் ஆடவர் பெண் வேஷம் பூணுவதானல் இப்படி இப்படிச் செய்யவேண்டும் என்றும் எழுதியிருக்கிறது. இக்காலத்தில் உபயோகிக்கப்படும் 'ஐப்ரோ பென்ஸில்' என்பதைப்போலப் புருவத்திற்கும் கண்ணிற்கும் மைதீட்ட அக்காலத்திலேயே ஒரு சிறிய கருவி இருந்ததாக அறிகிறோம்.

தமிழ் நாடகமானது இவ்வாறு அக்காலத்திலே உன்னத நிலையை அடைந்திருந்தால் அக்காலத்தில் தமிழ் நாடக நூல்கள் இருந்திருக்கவேண்டுமே? அவை ஏன் பிற்காலத்தில் மறைந்துபோயின? என்னும் இக்கேள்விக்கு நாம் தக்க பதில் கூறித்தான் ஆகவேண்டும். இவைகளைப்பற்றி ஆராயின், பழங்காலத்து நூல்களெல்லாம் ஓலைகளில்தான் எழுதப்பட்டன என்பதை ஞாபகப்படுத்திக்கொள்ளவேண்டும். நான் என் சிற்றறிவிற்கு ஏற்றபடி ஆராயப்புகுந்தபோது பல அறிஞர்களை 'ஓலையில் எழுதப்படும் நூல் எத்தனை காலம் கெடாது நிற்கும்' என்று வினவினேன். அவர்களுள் பெரும்பாலோர், எவ்வளவுதான் ஜாக்கிரதையாக நாம் ஓர் ஓலை நூலை வைத்திருந்தபோதிலும், அது 150 அல்லது 200 ஆண்டுகளுக்குமேல் நிற்காது; துகள் துகளாய்ப்போய்விடும் என்று கூறினர். ஆகவே ஒரு நூலை இவ்வரம்பிற்குள்ளாக அடிக்கடி பெயர்த்துப் புதிய சுவடிகளில் எழுதிக்கொண்டு வராவிட்டால் அந்நூல் பிற்காலத்தில் நிலைத்திருக்க முடியாது. இம்மாதிரியாகத் தொல்காப்பியம் முதலிய நூல்கள் அடிக்கடி பெயர்த்து எழுதப்பட்டதனால்தான் நமக்குக் கிடைத்திருக்கின்றன என்பதற்கு ஐயமில்லை. நாடக நூல்களை அடிக்கடி பெயர்த்து எழுதுவோர் வரவரக் குறைந்து கொண்டேவந்தனர் போலும்! அடியார்க்கு நல்லார் தம் காலத்திலேயே அகத்தியம், பரதம், மாபுராணம், பூதபுராணம் முதலிய நாடக நூல்கள் மறைந்துபோனதாகக்கூறி இருக்கின்றார். அவர் காலத்தில் வழங்கியிருந்த மதிவாணன் நாடகத்தமிழ், பரதசேனாபதியம் என்னும் இரண்டு நூல்களைப்பற்றிப் பேசியிருக்கிறார். இவையிரண்டிலும் மதிவாணன் நாடகத்தமிழ் மாத்திரம் ஏதோ நமது புண்ணியவசத்தால் பிழைத்திருக்கிறது.

மேற் சொல்லிய நாடக நூல்களெல்லாம் இலக்கண நூல்களாகும். ஒன்றாவது நாடக இலக்கிய நூல் அன்று. அக்காலத்திய இலக்கிய நூல் ஒன்றும் நமக்குக் கிடைத்திலது. 'இலக்கியம் கண்டதற்கு இலக்கணம்கூறல்' முறையாகும். ஆகவே இலக்கண நூல்களிருந்தால் அவைகளுக்கு முன்பே இலக்கிய நூல்கள் இருந்திருக்கவேண்டும். அங்ஙனமாயின் அந்நூல்களெல்லாம் மறைந்துபோன காரணத்தை நாம் நன்றாய் ஆராயவேண்டும். இதன் முக்கியகாரணம் என் சிற்றறிவிற்குத் தோன்றுவது என்னவென்றால், அந்நூல்களெல்லாம் அடிக்கடிப் பெயர்ந்து எழுதுபவர் இல்லாமற் போனதால் அழிந்துபோயின என்பதேயாம். இப்படி இருப்பின், மற்ற மத சம்பந்தமான நூல்களும் காவியங்களும் அடிக்கடிப் பெயர்ந்து எழுதப்பட்டபோது நாடக நூல்களைமட்டும் பெயர்ந்து எழுதுபவர் ஏன் இல்லாமற்போயினர் என்பது கேள்வியாகும். இதற்கு என்னுடைய பதில்; ஆதிகாலத்தில் தமிழ் நடிகர்களும் நடிகைகளும் ஏதோ ஒருவிதமாக மதிக்கப்பட்டனர் என்றே சொல்லவேண்டும்; சிலப்பதிகாரத்தின் சிறப்புப்பாயிரத்தில் "நாடகமேத்தும் நாடகக்கணிகை" என்னும் சொற்றொடரை விளக்கி எழுதுங்கால் நாடகத்திற்கே ஒரு பெருமை உண்டாக்கிய நாடகக் கணிகை (மாதவி) என்று எழுதியிருக்கிறார். அதற்குப் பின்பாக வரவர நாடகமாடும் ஆண் மக்களும் பெண்டிரும் ஈன நிலையை அடைந்துகொண்டேவந்தனர் என்பதற்கு ஐயமில்லை. கடைசியாக கி. பி 10ம் நூற்றாண்டில் நாடகமே மிகுந்த கீழ் நிலையை அடைந்தது என்பதற்குச் சந்தேகமில்லை. அப்படி இருக்குங்கால், கீழ்ப்பட்டவர்களாக மதிக்கப்பட்ட கூத்தாடிகளுக்காக நாம் நாடகநூல்களை ஏன் பெயர்த்து எழுதவேண்டும் என்று கைவிட்டிருக்கக்கூடும் என்பதுதான் நாடக நூல்கள் மறைந்துபோனதற்கு முக்கியமான காரணமாயிருக்கலாம்.

தஞ்சாவூர் பிரகதீசுவரர் ஆலயத்தின் கல்வெட்டு ஒன்றில், வருஷா வருஷம் ஆலயத்தின் உற்சவகாலத்தில் 'ராஜ ராஜேஸ்வரன்' என்னும் நாடகம் ஆடுவதற்காகத் திருவாளர் விஜயராஜேந்திர ஆசாரியனுக்கும் அவனைச் சார்ந்த நடிகர்களுக்கும் இவ்வளவு நெல் கொடுக்கவேண்டுமென்று வெட்டப்பட்டிருக்கிறது. இதுபோலவே, இன்னும் சில கோயில்களில் உற்சவகாலங்களில் தமிழ் நாடகங்கள் ஆடப்பட்டதாக அறிகிறோம். இதற்குப்பின் பதினான்காம் நூற்றாண்டில் முஸ்லிம்கள் தமிழ்நாட்டின்மீது படையெடுத்துவந்து தென்னாட்டு அரசர்களை முறியடித்துத் தென்னாட்டில் பல கோயில்களை அழித்துச்சென்றனர் எனபது சரித்திரப் பிரசித்தமானவிஷயம். நாடெங்கும் குழப்பமாகி அல்லற்பட்டுக்



கொண்டிருந்த பொழுது நாடகங்களை நடிப்பவர்யார்? அவர்களை ஆதரிப்பவர் யார்? ஒரு குடியானவன் தான் விதைத்த தானியத்தின் பலனைத் தான் அடைவானோ இல்லையோ என்று திகில் அடைந்திருக்கும் காலத்தில் கூத்து முதலிய விநோதங்களின்மீது யாருடைய மனம் செல்லும். ஆகவே, படிப்படியாகக் கீழ்நிலையடைந்துகொண்டே வந்த தமிழ் நாடகமானது தெருக்கூத்தாய் முடிந்தது. இத்தெருக் கூத்துகளைப்பற்றி உங்களுக்கு நான் அதிகமாய்ச் சொல்லவேண்டியதில்லை. இங்கு ஒரே உதாரணத்தை மாத்திரம் எழுதுகிறேன். பல ஆண்டுகட்குமுன் தென்னாட்டு ஜமீன்தார் ஒருவர் கலியாணத்திற்கு நான் போயிருந்த சமயத்தில் ஒருநாள் இரவு பக்கத்துக் கிராமத்தில் தமிழ் நாடகமொன்று ஆடப்போவதாகக் கேள்விப்பட்டு அங்கு போயிருந்தேன். ஏதோ ஜமீன்தாரின் சினேகிதர் வந்திருக்கிறாரே யென்று நடிகர்களெல்லாம் வேசம் பூண்டு வந்து என்னைப்பார்த்து வணங்கினர். அப்போது, 'நீங்கள் என்ன நாடகம் இன்று இரவு ஆடப்போகிறீர்கள்?' என்று நான் கேட்டதற்கு அவர்கள் தந்த பதில் என்னைத் தூக்கி வாரிப்போட்டது. அவர்களுடைய பதிலை அப்படியே எழுதுகிறேன். "எங்களுக்கு நாலைந்து நாடகங்கள் ஆடத்தெரியும்; திரௌபதி துகில் உரிவு, அபிமன்யு கல்யாணம், ஸ்திரிஸாகஸம். மார்க்கண்டேயர் நாடகம்- இவைகளில் எதை ஆடச் சொல்கிறீர்களோ அதை ஆடுகிறோம்" என்றார்கள். ஒரே ஆடையில் மேற்சொன்ன நாடகங்கள் எதையும் ஆடும்படியான சக்தி அவர்களுக்கு இருந்தது என்றால் அக்காலத்தில் தமிழ் நாடகம் எந்த நிலை அடைந்திருந்தது என்று நான் கூற வேண்டியதில்லை. இரவெல்லாம் ஒரு நாடகத்தை ஆடிவிட்டு மறுநாட் காலையில் நடிகர்களெல்லாம் அவர்கள் ஆடிய உடையிலேயே அந்த நாட்டுப்புறத்தின் வீதிதோறும் சென்று நெல் அரிசி முதலியவைகளையும், சொற்பக்காசுகளையும் யாசித்தனர். சுமார் 60 வருடங்களுக்கு முன் தமிழ் நாடகத்தின்கதி இதுவாயிருந்தது.

தமிழ்நாடகம் இந்நிலையிலிருந்து பல ஆண்டுகளுக்குப்பிறகு கொஞ்சங் கொஞ்சமாகத் திருந்தி, ஜனங்களின் மதிப்பைப் பெறுவதற்கு வேண்டிய முறையில் வளர ஆரம்பித்த கதையை இனி எழுதுகிறேன்.

ஆயினும் இதற்கிடையில் தமிழ் நாடகத்தைப்பற்றிச் சில சமஸ்கிருத அபிமானிகள் ஏளனமாகக்கூறும் ஒருவிஷயத்தை மறுக்க விரும்புகிறேன். அவர்கள் சொல்லுவதாவது:—

ஆதியில் தமிழ் நாடகமே கிடையாது. சமஸ்கிருத மொழியின் தொடர்பு தமிழ் நாட்டிற்குக் கிட்டிய பிறகுதான் தமிழ் நாடகங்கள் ஆரம்பிக்கப்பட்டன - என்பதாம். இது முற்றிலும் தவறான கருத்து என்று இதை நான் மறுக்க வேண்டும். இவ்வாறு கூறுவது எனக்குச் சமஸ்கிருத மொழியின் மீது உள்ள வெறுப்பினால் என்று ஒருவரும் எண்ணக்கூடாது என்று நான் வேண்டிக்கொள்கிறேன். சமஸ்கிருத மொழியின்மீது எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு. நான் பெரியவனான பிறகு 14 ஆண்டுகள் ஒரு சமஸ்கிருத ஆசிரியரை வைத்துக்கொண்டு அம்மொழியைக் கற்றேன்; முக்கியமாக, சாகுந்தலம் முதலிய சிறந்த நாடகங்களைப் படித்து அந்நாடகங்களிலுள்ள பல சிறப்புகளை அறிந்தேன். ஆயினும், 'தமிழ் நாடகமானது சமஸ்கிருத நாடகத்திலிருந்து வந்தது; அதைப்பார்த்துக் கற்றுக்கொண்டது' என்பதை நான் ஒப்புக்கொள்ளமாட்டேன். தமிழ் நாடகமானது தானாய்த் தமிழ் மொழியிலேயே உற்பத்தியானது என்பது என் திடமான கொள்கை. இதற்குப் பலகாரணங்களை 'நாடகத்தமிழ்' என்னும் சில வருடங்களுக்குமுன் நான் அச்சிட்ட ஒரு நூலில் விவரித்துக் கூறியிருக்கிறேன்; அவைகளையெல்லாம் இங்கு எழுதுவது என்றால் இடமுமில்லை; காலமுமில்லை. அவற்றுள் சிலவற்றை மட்டும் இங்கு எழுதுகிறேன். சமஸ்கிருத நாடகத்தில் அங்கங்கள் எனும் பிரிவு உண்டு. கதாநாயகன் இன்னின்ன குணங்களையுடையவனாயிருக்கவேண்டும் என்ற நியதியுண்டு. அவர்களை நான்கு பிரிவுகளாகப் பிரித்துள்ளார்கள்; கதா நாயகிகளை மூன்று முக்கியப்பிரிவுகளாகப் பிரித்துள்ளார்கள். இவைகளெல்லாம் தமிழ் நாடகத்தில் இல்லை. சமஸ்கிருதத்திலிருந்து தமிழ்நாடகம் உண்டாயிருந்தால் இவைகளெல்லாம் இருக்கவேண்டுமல்லவா? அன்றியும் இன்னொரு முக்கிய வேறுபாட்டைப்பற்றி எழுதுகிறேன். சமஸ்கிருத நாடகத்தின் துவக்கத்தில் சூத்திரதாரன் வருவான். தமிழ்நாடகத்தில் இந்தச் சூத்திரதாரன் இல்லை. ஆனால் கட்டியக்காரன் என்று ஒரு பாத்திரம் மட்டும் உண்டு. சமஸ்கிருத அபிமானிகள் கட்டியக்காரன்தான் சூத்திரதாரன் என்று கூறுகிறார்கள். இது முற்றிலும் தவறாகும். சூத்திரதாரன் சமஸ்கிருத நாடகத்தில் முதலில் தோன்றி நாடகத்தை ஆரம்பித்துவிட்டு மறைகிறான். தமிழ்நாடகக் கட்டியக்காரனோ நாடக ஆரம்பமுதல் கடைசிவரையில் மேடையின்மீது இருந்துகொண்டு ஒவ்வொரு புதுப் பாத்திரம் வரும்போதெல்லாம் அதைத் தெரிவிக்கவேண்டியவனாயிருக்கிறான். இன்னும்

பல விந்தியாசங்களுமுண்டு. அவைகளைப் பற்றி யெல்லாம் நான் இச்சிறுவியாசத்தில் கூறுவதற்கில்லை. நாடக அபிமானிகள் அவைகளைப்பற்றி யெல்லாம் நாடகத்தமிழ் என்னும் மேற்குறித்த எனது புத்தகத்தில் படித்துத் தெரிந்துகொள்ளும்படி வேண்டுகிறேன்.

இனித்தமிழ் நாடகமானது மிகவும் இழிந்த நிலையிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாகக் கடைத்தேறி முன்னுக்கு வந்ததைப்பற்றி எழுதுகிறேன். சுமார் 70 ஆண்டுகளுக்கு முன்பாக பூனாவிலிருந்து ஒரு மஹாராஷ்டிர நாடகக் கம்பெனியார் தஞ்சாவூருக்கு வந்து சில நாடகங்களை நடத்தினார்கள். அப்பொழுது அங்கிருந்த கோவிந்தசாமிராவ் என்ற மஹாராஷ்டிரர் அந்தக் கம்பெனியாரைப்போல் தமிழில் நாடகங்கள் நடத்த வேண்டுமென்று தீர்மானித்துத் தஞ்சாவூரிலிருந்த சில மஹாராஷ்டிரர்களை ஒருங்கு சேர்த்து அவர்களுக்குத்தாம் அறிந்தபடி நாடகமாடக் கற்பித்து, “மனமோகன நாடகக் கம்பெனி” என்னும் ஒரு நாடகக் கம்பெனி ஏற்படுத்தி முதலில் தஞ்சாவூரில் நடத்தினர், அங்கே அவர்கள் நாடகத்திற்குக் கொஞ்சம் ஆதரவுகிட்டவே, அந்தக்கம்பெனியைச் சென்னைக்கு அழைத்துக் கொண்டுவந்து இங்குத் தமிழில் நாடகங்களைச் செங்காங்கடைக் கொட்டகையில் நடத்தினர். ஏறக்குறைய இதேசமயத்தில் பல்லாரியில் வக்கீலாயிருந்த கிருஷ்ணமாச்சாருலு என்பவர் சில தெலுங்கு நாடகங்களை எழுதி, பல்லாரியில் முதலில் ஆடி விட்டுப் பிறகு சென்னையில் 1891வது வருஷம் மூன்று நாடகங்களை நடத்தினர். அவைகளில் கடைசி நாடகத்தைப் பார்த்த நான், தமிழ்நாடகங்களை எழுதி அவைகளில் நடிக்கவேண்டுமென்று ஆசை கொண்டவனாய் அவ்வருடம் சுகுணவிலாசசபை என்னும் தமிழ் நாடகசபையை எனது பால்ய நண்பர்களுடன் சேர்ந்து ஆரம்பித்து வைத்தேன். இரண்டு மூன்று வருடங்களுக்குள்ளாகச் சென்னையில் பல “அமெச்சூர்” நாடகசபைகள் (அதாவது வேடிக்கைக்காக நாடகங்களை நடத்தும் சபை) பரவலாயின. இவைகள் மூலமாகத் தமிழ் நாடகம் புத்துயிர் பெற்றது என்றே சொல்ல வேண்டும். இச்சபைகள் மூலமாகத் தமிழ் நாடகமானது பலவிதங்களில் சீர்திருத்தப்பட்டது. அவைகளில் முக்கியமான சிலவற்றை இங்கு எழுதுகிறேன். இரவெல்லாம் ஆடும் நாடகங்கள் போய், இரவு 9மணிக்கு ஆரம்பித்து நாடகங்களைச் சுமார் 4, 5 மணிநேரத்திற்குள் முடிக்கவேண்டும் என்பது வழக்கத்தில் வந்தது. ஒவ்வொருகாட்சியிலும் காட்சிக்குத்தக்கபடி திரைகளும் பக்கப்படுதாக்களும் மேல் ஜாலர்களும் ஏற்படுத்தப்பட்டன. ஒவ்வொரு நாடகத்திலும் கதையின் காலதேச வர்த்தமானப்படி நடிகர்களும் நடிகைகளும் ஆடைஆபரணங்களைப் பூணும் வழக்கம் கொண்டுவரப்பட்டது. சங்கீதமானது தக்க இடங்களில்தான் உபயோகிக்கப்படவேண்டும் என்பது விதியாயிற்று; பின்பாட்டு அடியோடு ஒழிக்கப்பட்டது. ஜாலர்கள், தாளங்கள் சங்கீதத் தினின்றும் விலக்கப்பட்டன. பக்கவாத்தியக்காரர்கள் பக்கப் படுதாக்களில் இருந்து மறைந்தே வாசிக்க வேண்டும் என்பது வழக்கமாயிற்று; விளக்குகளை மேடையில் எங்கே பார்த்தாலும் வைப்பதும் கூரையினின்றும் தொங்கவிடுவதும் முற்றிலும் நீக்கப்பட்டது. இன்னும் இப்படிப்பட்ட பல சீர்திருத்தங்களை ‘அமெச்சூர்’ சபைகள் வழக்கத்தில் கொண்டுவர, அவைகளைப் பார்த்து ஜீவனத்திற்காக நாடகங்கள் ஆடும் சபைகளும் விருத்தி அடைந்தன.

பல புதிய நாடகங்கள் எழுதப்பட்டன. மேனாட்டு ஷேக்ஸ்பியர் முதலிய மகாநாடகக் கவிகளின் நாடகங்கள் தமிழ் மொழியில் பெயர்க்கப்பட்டன. சம்ஸ்கிருத நாடகங்களில் சிலவும் மொழி பெயர்க்கப்பட்டுத் தமிழ் அரங்கு ஏறின. இவ்வாறு தமிழ் நாடகங்கள் தலையெடுத்து முன்னேற்றமடையுங்காலத்தில் திடீரென்று “வெண்ணெய்திரண்டுவரும் சமயத்தில் தாழிஉடைந்தது” என்பதைப்போல் பேசும்படங்கள் நமது தேசத்தில் புகுந்து தமிழ்நாடகத்தையே அமிழ்த்திவிட்டன என்பது எல்லா நாடக அபிமானிகளும் அறிந்த விஷயமே. அமிழ்த்தின என்பதைக் கவனிக்கவும் அழித்தன என்று நான்கூறவில்லை. இதற்கு முக்கிய காரணம் சினிமாக்கள் எவ்வளவுதான் பிரபலம் அடைந்தபோதிலும் அவைகள் தமிழ்நாடகங்களை அடியுடன் அழிக்கமுடியாது என்பது எனது கண்டிப்பானகருத்து. இது என்னுடையகருத்து மட்டும் அன்று; ஐரோப்பா, அமெரிக்கா முதலிய கண்டங்களில் உள்ள கலைவாணர்களுடைய கருத்துமாகும். அவர்கள் கூறுவது என்னவென்றால் “நடிகர்களின் படங்களைத் திரையில்பார்ப்பதைவிட அவர்கள் மேடையின்மீது நடிக்கும்போது நேராகப் பார்ப்பதில் ‘ருசி’ நாடகாபிமானிகளுக்கு எப்பொழுதும் குன்றாது” என்பதாம்.

கடைசியாகத் தமிழ்நாடகத்திற்கு இப்பொழுது நல்லகாலம் வந்துவிட்டது என்றே கூறவேண்டும். வெள்ளைக்காரர்கள் நம்மை ஆண்டகாலத்தில் அவர்கள் தமிழ் முதலிய தேச மொழி நாடகங்களைச் சிறிதும் கவனிக்க



வில்லை. என்பது எல்லோரும் அறிந்த விஷயமே. அவையெல்லாம் மாறி நமது நாட்டை நாமே ஆளும் உரிமைகிடைத்த பிறகு நமது அரசியலார் தேசமொழி நாடகங்களுக்குப் பல விதத்தில் ஊக்கமளித்துக் கைகொடுத்துத் தூக்க ஆரம்பித்திருக்கின்றனர் என்று நான் சந்தோஷத்துடன் கூறுகிறேன். நம்மை ஆளும் ஜனநாயகத்தலைவர்கள் முக்கியப் பட்டணங்களில் பொருளுதவிசெய்து நாட்டு நாடகங்களை அபிவிருத்தி செய்யவேண்டும் என்கிற கோரிக்கை ஏற்படுத்த ஆரம்பித்திருக்கின்றனர்; அன்றியும் சிறந்த நாடகங்களுக்குப் போட்டிப் பந்தயம் வைத்து முதலாகத்தேர்ந்தெடுக்கப்பட்ட நாடகங்களுக்குப் பரிசளிக்கும் வழக்கத்தை ஆரம்பித்திருக்கின்றனர்; மேலும் சிறந்த நடிகர்களுக்குப் பொற்பதக்கங்கள் ஆண்டுதோறும் அளித்து அவர்களை உற்சாகப்படுத்த முன்வந்திருக்கின்றனர்; இதுவரையில் தமிழ் நாடகங்களை அமிழ்த்தி வருத்திக்கொண்டிருந்த ‘வினோதவரி’ க்கட்டணத்தை அறவே நீக்கிவிட்டனர். இப்படிச் சொல்லிக்கொண்டுபோனால் விரியும். ஆகவே இதை நிறுத்தித்தமிழ் நாடகங்களுக்கு நற்காலம்வந்த இத்தருணத்தில் அரசாங்கத்தாரும் நாடக அபிமானிகளும் என்னென்ன விதங்களில் அவைகளை முன்னுக்குக்கொண்டுவரலாம் என்பதைப் பற்றிச்சில வாக்கியங்கள் எழுதி இச்சிற்றுரையை முடித்துக்கொள்கிறேன்.

முதலாவதாகத் தமிழ் நாடகம் இன்னும் விருத்திஅடையாததற்கு முக்கியமான காரணம் என்னவென்றால் இப்போது நாடகம் ஆடுவதற்கு மேடைகள் போதுமானபடி இல்லாதிருப்பதேயாம்—பழையநாடக மேடைகளெல்லாம் எங்குப்பார்த்தாலும் சினிமாத்தியேட்டர்களாக மாற்றப்பட்டன. ஆகவே முக்கியமாகப் பெரிய பட்டணங்களில் எல்லாம் நாடகம் ஆடுவதற்கு என்றே பெரிய நாடகசாலைகள் கட்டப்படவேண்டும். தமிழ்நாட்டில் 30,000 ஜனத்தொகைக்கு மேற்பட்ட ஊர்கள் ஒவ்வொன்றிலும் ஒரு நாடகசாலையாவது இருக்க வேண்டும். இப்படிக் கட்டுவதற்கு நமது அரசாங்கத்தார் இலவசமாக நிலங்களை வழங்க வேண்டும். அன்றியும் கட்டிடங்களுக்குப் பொருளுதவியும் செய்யவேண்டும். மேலும் இந்தக்கட்டிடங்களைச் சினிமாக்களுக்கு விடக்கூடாது என்ற சட்டம் இருக்கவேண்டும்-சினிமாக்களுக்குவிட ஆரம்பித்தாலோ முடிவில் ஒட்டகத்திற்கு மூக்குநுழைக்கக் கூடாரத்தில் இடம்கொடுத்த எஜமான் கதைபோலாகும்.

இரண்டாவதாக, ஆங்காங்கு நாடகக்கலை கற்பிக்கப்பள்ளிக்கூடங்கள் ஏற்படவேண்டும். அவைகளில் சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் நடிப்புக்கலை கற்பிக்க நிபுணர்களான நடிகர்களை ஏற்படுத்தவேண்டும். இரண்டு வருடத்திற்கு ஒருமுறை அங்குப் பயில்பவர்களைச் சோதித்துத் தேர்பவர்களுக்கு நற்சாட்சிப் பத்திரங்கள் வழங்கவேண்டும்.

மூன்றாவதாகத் தமிழ் நாட்டில் உள்ள சிறந்த நடிகர்களை வட இந்தியாவிற்கும் இங்கிலாந்து, பிரான்ஸ், அமெரிக்கா, ரஷ்யா முதலிய தேசங்களுக்கும் அனுப்பி அங்குள்ள சிறந்த நடிகர்கள் எப்படி நடிக்கிறார்கள் என்பதைப்பார்த்துக் கற்கச்செய்யவேண்டும்.

நான்காவதாக, மற்ற மொழிகளில் உள்ள சிறந்த நாடகங்களைத் தமிழில் தக்கவர்களைக் கொண்டு மொழிபெயர்த்துத் தமிழ் அரங்கு ஏற்றவேண்டும்.

ஐந்தாவதாக, முதிர்வயது அடைந்தபடியாலோ அல்லது வியாதியினால் பீடிக்கப்பட்டதனாலோ நடிப்பதற்கு இயலாதபடிஇருக்கும் நடிகர்களுக்கு ஜீவனும்சமாகவோ அல்லதுஉபகாரச்சம்பளமாகவோ பணம்கொடுக்க அரசாங்கத்தார் ஒரு தனிநிதி ஏற்படுத்தவேண்டும்.

கடைசியாக, ஆடவரும் பெண்டிரும் நாடகமாடுவதை இழிதொழிலாகக் கருதாது அதையே தாங்கள் ஜீவனோபாயமான தொழிலாகக் கொள்ளவேண்டும். குடும்பப் பெண்கள் நாடகமேடையில் ஆடும் வழக்கம் கொஞ்சம் கொஞ்சமாகப் பரவவேண்டும். இதில் சில கஷ்டங்கள் இருக்கின்றன என்பதை நான் அறிவேன்; முதலில் கணவனும் மனைவியும் கதாநாயகனாகவும் கதாநாயகியாகவும் ஆடலாம். அவ்வாறே சகோதரர்களும் சகோதரிகளும் அவ்வாறே செய்யலாம். நெருங்கியபந்துக்களும் சிநேகிதர்களும் ஒன்றாய் நடிக்கலாம். இவ்வாறு கொஞ்சம் கொஞ்சமாகத் திரிந்து வந்தால் இக்காலத்தில் ஐரோப்பா முதலிய கண்டங்களில் நற்குல மாதர்கள் ஆடும் வழக்கமானது நமது நாட்டிலும் பரவும் என்பதற்குச் சந்தேகமில்லை.

நாடகத் தமிழ் வாழ்க!

மதுரைத்தமிழ்ச் சங்கப் பொன் விழாமலர் 1956

★

# மொழி-இந்திய வரலாற்றுக்கு முன்

## குறிப்பு-1

## திராவிட மொழிகளிலிருந்து சமஸ்கிருதம் எடுத்தாண்ட சொற்கள்

——(o)——

டி. பர்ரோ தன் புத்தகத்தில் சமஸ்கிருதம் எடுத்தாண்ட திராவிடச்சொற்களை அடையாளம் காண சிலகுறிப்பிட்ட கொள்கைகளை வகுத்திருக்கிறார். கீழ்காணும் சிலகுறிப்புடன் அவைகளைச் சுருக்கித்தருகிறேன்.

(1) நாம் எடுத்துக்கொள்ளும் சமஸ்கிருதச் சொல் இந்தோ-ஐரோப்பிய சொல் வரலாற்றில் இல்லாததாக இருக்கவேண்டும். உறுதியில்லாததும் ஐயப்பாடின்றியும் இந்தோ-ஐரோப்பிய சொல்வரலாற்றில் இல்லாததாக இருக்கவேண்டும்.

(2) ஒரு சொல் திராவிடக்குழு மொழிகளில் பல்கிப்பரவியும் சொல் தொகுதியில் அடிப்படைப்பொருளாகவும் இருக்கவேண்டும்.

(3) ஒரு சொல் திட்டவட்டமாக திராவிடச் சொல்லின் பகுதியிலிருந்து பெறப்பட்டால் அந்தக் குறிப்பிட்டசொல் திராவிட இனத்தைச்சேர்ந்ததாகும். உதாரணமாக, 'சந்தன' என்ற சொல் திராவிடச்சொல் அல்லது திராவிட மூலத்திலிருந்து பிறந்தசொல். ஏனெனில் 'சந்தன' என்ற சொல்லை ஒத்திருக்கும் 'சாந்து' என்ற சொல் திராவிட மொழியின் பெயர்ச்சொல். 'குழம்பாக ஆக்குதல்' 'மசிய அரைத்தல்' என்பன போன்றபொருள்களைத் தரும் வினைச்சொல்லினின்றும் பிரிந்த வேறு பல உருபுச்சொற்கள்.

(4) ஒரு சொல் திராவிடமொழியில் பழங்காலந்தொட்டு வழக்கில் உள்ளதாயிருக்க வேண்டும். உதாரணமாக பழம்பெரும் தமிழ் ஏடுகளில் குறிப்பிட்டசொல் காணப்படவேண்டும்.

(5) ஒரு சொல் திராவிட மொழிகளுடன் ஒத்திட்டுப்பார்க்கும் பொழுது சமஸ்கிருத மொழியில் பிற்காலத்தில் வழக்கில் இருந்தால் அது முந்தைய மொழியிலிருந்து எடுத்தாளப் பட்டிருக்கவேண்டும்.

(6) ஒவ்வொரு சொல்லிலும் ஒலி ஒப்பிட்டுப் பார்க்கப்படவேண்டும்.

(7) சொல் வரலாறும் சிற்சில சமயங்களில் பார்க்கப்படவேண்டும்.

(8) ஒரு சொல் இந்திய நிலநூல் சம்பந்தமாக தனிச்சிறப்புடைய பொருளையோ அல்லது சமூகத்தைப்பற்றியோ குறிப்பிட்டால் அந்தச்சொல் இந்தோ-ஐரோப்பிய மூலத்தைக் காட்டிலும் திராவிட மூலத்தைக் கொண்டதாகத்தான் இருத்தல்வேண்டும்.

மேற்கூறிய ஒப்பளவுக்கருவிகள் எல்லாம் எல்லா வழக்குகளுக்கும் பொருந்தாது. பொது ஒழுங்குமுறைகளைப பயின்று, வளைந்து வளைந்து செல்லும் சொல்லமைப்பு, மொழியியல் வளர்ச்சி இவைபற்றி மேற்கொள்ளும் தன்முனைப்பான கொள்கைகளும் ஒதுக்கப்படவேண்டும். இம்முறையைப் பின்பற்றினால் இந்தோ-ஐரோப்பிய சொல்மூலம் எனறு கருதப்பட்ட எழுத்துக்கள் எல்லாம் திராவிடக் குழு மொழிகளைச் சார்ந்தவையே என்று திட்டவட்டமாகக் கூறுவதற்கு வேண்டிய ஆதாரங்கள் கிடைக்கும்.

இதன் கீழ்க்காணும் சொல் இலக்கணமும் சொல்வரலாறும் இக்கட்டுரையில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. திராவிடக்குழு மொழிகளையும் அவற்றைக்குறிக்கும் குறிப்பு எழுத்துக்களையும் வரிசைப்படுத்திக் கொடுக்கினறேன்.

த = தமிழ், ம = மலையாளம், கோ = கோதம், து = துதம், க = கன்னடம், கு = குடகு அல்லது கூர்க்கு, துளு = துளு, தெ = தெலுங்கு, கொ = கொலாமீ, நா = நாயிகி, பா = பார்ஜி, ஒ = ஒலாரி, கோண் = கோண்டு, குரு = குருக், மா = மால்டோ, பி = பிராகுவி, ச = சமஸ்கிருதம், மரா = மராத்தி, குயி = குயி, குவி = குவி.

1. (த) கைத்தல்; கைதை = நைதல், ஊட்டுதல்; தாழை, வயல்.
(ம) கைதா
(கோ) கேதகி, கேடிகி
(துளு) கேதை, கேதயி
(தெ) கெட்டா, கெடகி
(ச) கேதகா, கேதகி

தமிழ், மலையாளம் மொழிச்சொற்களில்வரும் 'அய்' என்ற இணையுயிர் எழுத்து, இதே எழுத்துக்கள் திராவிட மூலத்தைச் சார்ந்தவைகள் என்பதற்குச் சான்று பகர்கின்றன.

2. (த) ஏலம் = ஏலக்காய்; ஏலவரிசி = ஏலவிதை.
(ம) ஏலம் = ஏலக்காய்; ஏலத்தரி = ஏலவிதை.
(க) ஏலக்கி, யாலக்கி, யாலகி
(கு) எலகி
(துளு) ஏலக்கி
(தெ) ஏலா, ஏலகி; ஏலகுலு (பன்மை)
(ச) ஏலா

3. (த) பல்லி
(ம) பல்லி
(கோ) எபாஜி
(து) பாசி
(க) பல்லி
(கு) பல்லி
(துளு) பல்லி
(தெ) பல்லி; பல்லி (மெதுவாக உச்சரிக்கப் படவேண்டும்)
(மரா) பல்லி, பேல்
(ச) பல்லீ; பல்லிகா

4. (த) மயில்; மன்னை
(ம) மயில்
(கோ) மியில்
(து) மியிஸ்
(க) மைலா, மைலு
(கு) மைலி
(துளு) ம்மரு
(பா) மன்ஜில், மன்னில்
(ஒ) மஞ்சில்
(கோண்) மல்
(குயி) மெது, மெலு
(குவி) மெல்லு
(ச) மயூரா, மயூரி (பெண்மயில்.)

5. (த) புற்று, புற்றம் = எரும்பு, வெள்ளை எரும்பு.
(ம) புற்றே, புற்று, உரும்பு, கட்டுரும்பு.
(க) புட்டு, புட்டா
(கு) புத்தீ
(துளு) புங்கா = பாம்புவலை.
(தெ) புட்டா, புத்து
(கொ) புத்தா
(நா) புத்தா
(பா) புத்கல் (வட கிழக்கு)
புத்துகல் (தெற்கு)
புத்தா = வலை.
(ஒ) புத்கல்
(கோண்) புத்தி
(குயி) புசி
(குவி) பூசி பூன்ஞ்சா
(குருக்) புத்தா, புத்பிலோ
(மா) பூத்
(ச) புட்டிகா, பிபிலிகா புத்தா.

கைப்பாவை, பொம்மை எனப்பொருள்படும் 'புத்திகா' என்ற சொல்லிலிருந்து பிறந்தது என்று போத்லிங் ராத், ஊலன்பெக், மோனியர் வில்லியம்ச் முதலியவர்கள் கருதுகிறார்கள். வலிந்து சந்தர்ப்பத்திற்காகக் கூறப்படும் காரணங்கள்தான் இவைகள். பழம் திராவிட எழுத்தான 'ற்' தமிழிலும், மலையாளத்திலும் இன்னும் சிறிதும் சிதையாமல் அப்படியே இருக்கின்றன. ஆனால் 'த்' 'ட்' என்னும் இரு வேறுவழிகளில் திரிபடைந்து பலமொழிகளிலும் வழங்கிவருகின்றன. இரு வேறு திராவிட மொழிகளில் இருந்து சமஸ்கிருதம் இந்தச் சொல்லை எடுத்தாண்டிருக்கி

றது. எப்படியெனில், 'புத்தா', 'புட்டா' என்ற சொற்கள் பொதுவாக எறும்புப் புற்றையும் குறிப்பாக வெள்ளை எறும்பையும் குறிப்பிடுபவைகளாக முறையே கோலாமி, நாய்கி, பார்ஜி, குருக்; கன்னடம், தெலுங்கு, முதலிய திராவிட மொழிகளிலும் வழங்கிவருகின்றது. 'புட்டா' என்ற திராவிடச் சொல்லில் இருந்து சொல்லிற்கு உருவம் அமைக்கும் கடைச்சொல்லின் உதவியோடு 'புட்டிகா' என்ற சமஸ்கிருதச்சொல் பெறப்பட்டது.

6 (த) நீர் = தண்ணீர், சாறு, ஈரம், குளுமை, சிறுநீர்.
நீர்ப்பு, நீர்த்து = மெதுவாகப் போதல், தண்ணீராகுதல், நனைந்து போதல்
நீர்மை = நீர்ப்பொருள், குளுமைப் பொருள்.
ஈர் = நனை.
ஈரம் = நனைந்த, குளிர்ந்த, புதிதான, தண்ணீரான.
ஈரளி (ஈரளிப்பு, ஈரளித்து)
ஈரி (ஈரிப்பு, ஈரித்து)
ஈரிப்பு = நனைந்து, தண்ணீராகி
ஈரிய = குளுமை, சேர், நனைவு

(ம) நீர் = தண்ணீர், சாறு, ஈரம்.
ஈரம் = கசிவு, தூசி
ஈரிக்கா = சேராகுதல், சகதியாதல்
ஈர்மம், ஈர்மன், ஈரன் = நனைந்த துணி

(கோ) நிர் = தண்ணீர்.

(து) நிர் = தண்ணீர்
இரம் = கசிந்த

(க) நிர் = தண்ணீர்
ஈரா = கசிவு, நனைவு, தண்ணீராகுதல்.

(கு) நிரி = தண்ணீர்

(துளு) நீரு = தண்ணீர்

(தெ) நீரு = தண்ணீர் (இலக்கியச்சொல்)
நீல்லு = தண்ணீர் (வழக்குச்சொல்)
இமிரி = தடி, கசிவு.

(கொ, நா) இர் = தண்ணீர்

(பா, ஒ) நீர் = தண்ணீர்

(குயி) நீரு = ரசம், சாறு, குழம்பு.

(பி) தீர் = தண்ணீர், சாறு, குழம்பு, வெள்ளம்.

(ச) நீரா = தண்ணீர், சாறு, நீர்ப்பொருள்.
நீவரா = தண்ணீர், சகதி

தன் சொல் வரலாறு, மொழிஒலி வரலாறு, சொல்லின் பொருள் வளர்ச்சி இவற்றில் நம்பிக்கை உடையதாய் விளங்கும் பழம் இந்திய-ஐரோப்பிய சொல் வரலாறு அண்மைக்காலத்தில் லூயிச். எச். கிரே (Louis H. Gray) என்பவரால் கற்பனை செய்யப்பட்ட குரல்வளை ஒலி எனும் கருவி கொண்டு உயிர்பிக்கப்பட்டது. ஆனல் திராவிடச் சொல்லான 'நீர்' என்பதற்கு எதிர்சொல் இது என்று நம்புவதற்குக் கடினமானதாக இருக்கிறது.

7. (த) நல், நற், நல்ல; நல, (நலப், நலந்) = நன்மை, நயம், உத்தமம்.
நலம், நலவு, நற்கு, நற்பு, நண்பு, நன்மை, நன்றி நன்னர்

(ம) நல்ல = நன்மை, உத்தமம்.
நலம், நல்லம் = நன்மை, அழகு
நல்பு, நல்மா, நன்னி, நன்மா

(கோ) நல்வாயன் = நன்மை பேசும் வாயுடையவன், உத்தம வாழவு வாழ்பவன்.
நபல் = நேராகவும் ஒழுங்காகவும் வளரும் பல்.

(து) நஸ், நஸி = அழகு
நஸோன் = (மனிதனின்) பெயர்.

(க) நல், நலமி = நன்மை
நல்ல = உத்தம மனிதன், அழகு, உயர்வு.

(கு) நல்லீ = நன்மை

(துளு) நலு, நல = நன்மை, மலிவு.
நலமே = நட்பு, நன்மையான.

(தெ) நலுவு = அழகு, திறன்,

(கோண்) நீலா = நன்மை, நல்ல.

(ச) நலா = (மனிதனின்) பெயர்.

8. (த) மலை = குன்று, மலை.
(ம) மலா = மலை
குன்னு = குன்று

(கோ) மல் இம் = மலை எருமை.
மல் அயிர் = மேற்கு மலையின் ஆழ்ந்த பள்ளம்

(து) மசோர்
(க) மலி
} மலை, காடு

(தொடரும்)



# ≡ குற்றவாளி ≡

(அருணன்)

கண்ணே! என் அன்புமகளே! சற்றே நில் என் வார்த்தைகளைக்கேள். நீசெல்ல இருக்கும் வேகத்தில் என் தடை உனக்கு வேதனையாக இருக்கும். உன் இதயக்கிளர்ச்சிக்குமுன் என்சொற்கள் எரிக்கும் நெருப்பாகத் தோற்றும்-கருத்துக்குள் நீகாணும் கனவுக்கு இடையே என்கருத்து மறுப்பாயிருக்கும். ஆனல் இவற்றிற்கெல்லாம் காரணம் பெற்ற பாசமும் வளர்த்தபாடுந்தான். இளமைக்கு மெருகிட்டு எழிலுக்கு அளவிட்டாற்போல் அலங்கரித்துக் கொண்டு வெளிச்செல்லப் புறப்பட்டுக் கொண்டிருக்கிருய். என் செல்வமே! உன் முகத்தில் ஏற்பட்டுவிட்டமலர்ச்சியையும்-உன் அங்க அமைப்புக்களில் ஏற்பட்டுள்ளகவர்ச்சியும் உன் உள்ளம் அடைந்துள்ளமாற்றத்தை எனக்கு உணர்த்துகின்றன. ஆனல் அதை நான் கண்டது முதல் களிப்பும் பூரிப்பும் கொள்ளவில்லை. மாருகக் கவலையும் அச்சமும் கொள்கிறேன். ஒருதாயா இவ்விதம் கூறுகிருள் என்று கருதுவாய் என். கற்பகமே! உனக்கு நான் தாயாகிவிட்டதால் தான் இதைக் கூறுகிறேன். உனக்கு அழகு அந்தஸ்து, பட்டம், பதவி, பணம் எல்லாமும் இருக்கலாம். இருந்தாலும் இவற்றையெல்லாம் முறியடித்து வீழ்த்தும் ஒரு விநோத வழக்கம் இருக்கிறது இந்தநிலத்தில். அதை எதிர்க்க மறைக்க மாற்ற அழிக்க முற்கூறிய எவற்றுக்கும் வலிமையில்லை. ஏனெனில் அந்த வழக்கம் வழக்கிலிருந்துவருவதே முற்கூறியவற்றின் உரிமையாளர்களிடம், பாதுகாவலர்களிடம். அத்தகையோருக்கு அடிபணிவதுதான் இந்த அவனியின் வழிவழி. ஆகையால்தான் உன்போக்கைத் தடுக்க முயற்சிக்கிறேன். உன் காதல் விளைவையும், உன் காதலன் யாரென்பதையும், அவனுக்காக நீசெய்து கொண்டிருக்கும் கற்பனையின் அளவையும் கூடத் தெரிந்துகொண்டு தானிருக்கிறேன். சற்றுப் பொறுத்து இதமாக எடுத்துக் கூறினல் ஏற்றுக்கொள்ளுவாயென்ற எண்ணத்தின்பேரில்தான் இதுவரைப் பொறுத்திருந்தேன். இனியும் பொறுத்தால் இன்னலுக்கு ஆளாய்விடுவாயென்பதை உணர்ந்தே இப்போது தடுக்கிறேன்: நீ ஒரு தாசியின் மகளென்பது இந்தச் சமுதாயத்தின் தீர்ப்பு. என்னைத்தாசியாக்கியவர்களில் தலைமையானவர்கள் இந்தச் சமுதாயத் தலைவர்கள்தான் என்பதை அவர்கள் மறுக்கமுடியாது. என்றாலும் அவர்களிடையே சென்று கூறும் வல்லமை எனக்குக் கிடையாது. ஒரு காலத்தில் அவர்களின் படுக்கையறைப் பாவைநான். ஆனல் இன்றைய அவர்கள் பாதுகாவல் கோட்டையின் படிக்கட்டுகளில் கூடநான் கால்வைக்கமுடியாது. என் இன்பத்திற்காகக் காத்திருந்த அவர்கள் இப்போது நான் எட்டிக் கூடப் பார்க்க முடியாதபடி ஆணைகளுக்கும் ஆளம்புகளுக்கும் நடுவே அவர்கள் ஆனந்த வாழ்வு வாழ்கிருர்கள் நான அல்லல்படுகிறேன். அவர்களின் ஆணைக்கும் ஆட்சிக்கும் அடங்கியோர் வாழும் இடத்திலே தானம்மா நாம் வாழ்கிரும். ஆதலால் உன்னை இப்போதே எச்சரிக்கிறேன். காதலைக் கைவிட்டுவிடு என்றல்ல; காதலனல் கைவிடப்படுவாய்' என்பதை எதிர்பார்த்திரு என்று காதல் கைகூடவில்லையே என்று கலங்காதே-கவலைப்படாதே!

உன் உல்லாச எண்ணங்களுக்கிடையே என் பேச்சுக்கள் உறுத்தலாம்-இப்போது எங்கே வந்தது இந்தக்கிழப்பிணமென்று எரிச்சலாகக்கூட இருக்கலாம். இவை உன் தாயின் உள்ளக்கிடக்கை. நீ யாருடனவது நல்வாழ்வு வாழ்வதானல், உன் வாழ்வில் என்றுவது இன்பம் பெறுவாயானல்-உன் உள்ளத்திலே மகிழ்ச்சி நிலவுமானல் அதுவே என்வாழ்வின் பயன், என் இன்பத்தின் எல்லை, எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி. உன் உருவவளர்ச்சிகண்டு மகிழ்ந்த நான்-உன் உள்ள விரிவுகண்டு வருந்தினேன். இளமையில் உன் விளையாட்டுக்களைக் கண்டு உள்ளம் பூரித்தவள்-உன் பருவத்தின் பரவசப் போக்கைக்கண்டு பதைத்தேன். எல்லாம் என் தாய்மையின விளைவுதான். போ மகளே! போ. நான் சொன்னவைகளை மறவாதேபோ! என்று எதிரே நிற்கும் அந்த

சிந்திழுக்கு, ஒரு காலத்தில் எழிலரசியாய் விளங்கி, இன்று எழிலென்னும் சொல்லுக்கே பெரும்பகையாய் நரை, திரை, பிணி, மூப்பு, சாக்காடு என்பவற்றுள் கடைசிச் சொல்லுக்குப் பொருளிருக்கும் இடத்தை எதிர்பார்த்த வண்ணமிருக்கும் வடிவம்மாள் கூறி அனுப்பினுள். இந்த வடிவம்மாளுக்குச் சில பல ஆண்டுகட்கு முன் வடிவாம்பாள் என்ற பெயரிருந்தது. அந்த வடிவாளின் வயிற்றுப் பிறந்த ஒரே மகள் அழகு வடிவு. பெண் வளர்த்தி என்ற சொல்லுக்கோர் இலக்கியமாக உருவிலும் அழகிலும் ஒப்பனே வேண்டா உயிரோவியமாகத்திகழ்ந்தாள். பண வசதியும் சற்றே படைத்திருந்த காரணத்தால் கல்வியழகையும் மேவினுள். பருவப் பறவைக்குப் பருந்தான இளைஞர்களின் பார்வைகளில் பட்டுவிட்டகாரணத்தால்-அவர்களில் ஒருவன் அவள் உள்ளத்தில் இடம் பிடித்து விட்டான். ஆனுல் அவன் உள்ளத்தில் அவளுக்கு இடமளிக்கப்படவில்லை என்பதை அவளால் அவன் நெஞ்சை வெட்டிப்பிழந்தா பார்க்கமுடியும். அல்லது எட்டிப்பார்த்தால் தெரிந்து விடக்கூடிய அவ்வளவு எளிதான இடமா! படுபாதாளமான இதயமாயிற்றே! எனவே அவன் சொல்லையும் நடைமுறைகளேயும் நம்பினுள். அவள் நம்பிக்கைக்குக் கிடைக்கப்போகும் பரிசையும் பயனேயும் உலகை நன்கறிந்த அவள் தாயார் வலியுறுத்தினுள். அதன் விளக்கந்தான் முன்னே கூறப்பட்டவைகள். தாய் எவ்வளவுதான கூறினுலும் அவையனைத்தும் அவள் அறியாமையின் உளறலே என்றுதான் அழகு கருதினுள். கருதியதுமட்டுமல்ல அவளிடமே கூறினுள்.

“அம்மா! நீவாழ்க்கையில் ஏற்றுவிட்ட ஏமாற்றத்தின் காரணத்தால் என்னேயும் அவ்வாறு கருதிவிட்டாய். என் காதலர் மிகவும் நல்லவர். என்னே நன்குணர்ந்தவர். நான் யாரென்பதைத் தெரிந்துகொண்டதும் வருந்துவார்-வெறுப்பார் என றுதான் நான் எதிர்பார்த்தேன். ஆனுல் அவரோ என்போன்ருர் வாழ்வு வளம்பெற வேண்டுமென்பதே அவர் உயிர் நோக்கமென்ருர். என்னே அவர் அடைவது அவர் வாழ்வின் பயனென்று வாயாரப் புகழ்ந்தார். வாழ்ந்தால் என்னுடன்தான் வாழ்வது இல்லையெனில் வாழ்வென்ற ஒன்றே தனக்கில்லையென்று உறுதி செய்தார். அத்தகைய அருமையானவர், அன்பானவர், ஆணினங்களிலே ஓர் அதிசய மனிதர் அவர். அவரென்னே ஒருபோதும் கைவிடமாட்டார். இது என் கனவல்ல அம்மா! இன்னும் சில தினங்களில் நீங்கள் காணப்போகும் காட்சி. நாங்கள் மணம்செய்து கொள்ளப்போகிறும். மடமைக்கு மண்டியிடும் மக்களினம் வாழ்கின்ற கண்மூடித்தனத்தால் கருத்துக்கெட்டவர்கள் நிறைந்த இந்த நாட்டிற்கு நல்லபாடம் கற்பிக்க அருமை மக்களைப் பெற்றெடுக்கப் போகிறும். எங்கள் கனவெல்லாம் நனவாக்கி நடைமுறை நிகழ்ச்சியாக்க அந்தச் செல்வங்களே வளர்க்கப்போகிறும். பாருங்களேன் அப்போது கூறுங்கள் உங்கள் மகளின் சாமர்த்தியம் எப்படிப்பட்டது என்பதை. அம்மா! நான்போகவேண்டும். எனக்காக அவர் காத்துக்கொண்டிருப்பார். போய்வரட்டுமா?” “போய்வா மகளே! போய்வா!” என்று அனுப்பிவைத்தாள். காற்றினும் கடிதாக அழகு பறந்தோடிச் சென்ருள். அந்தப் பைங்கிளியின் வருகைக்கு வழிபார்த்திருந்தான் இளவழகன். கட்டான உடையும்-பார்வையில் மிடுக்கும் இருக்கும் இடம் தெரிவிக்கும் மணப்பூச்சும்-எதிர்பார்த்த நோக்கமும்கொண்டு ஒரு மல்லிகைப்புதரின் அருகே உலவியவண்ணமிருந்தான். பறந்தோடிவந்த அந்தப்பைங்கிளி உருவத்தில்மட்டும் மனிதனை அந்த மரத்தின் தோள்களாம் கிளையைப் பற்றினுள். பழக்கப் பட்டுப்போய் விட்டகாரணத்தால் பதட்டமோ பரபரப்போ கொள்ளவில்லை அவன். அழகு! என்று அமைதியாகவே அழைத்தான். வழக்கப்படி அத்தான் என்று பக்கத்தில் அமர்ந்தாள். அவனும் உடன சென்று அமர்ந்தான். அன்றையப் பேச்சின் முதல் தொடக்கமே திருமணம் பற்றியதாக இருந்தது. அதனல் மகிழ்ச்சிக்கோ சிரிப்பொலிக்கோ அங்கே வேலையில்லை. 'அமைதி-மௌனம்-மெதுவான குரலில் ஆத்திரப்பேச்சு இவைகள்தான அங்கே ஆட்சிசெய்தன. எவ்வளவுதான் முயன்று அவர்கள் மெதுவாகப் பேசினுலும் மெல்லவீசும் மாலைக்காற்று அந்த வார்த்தைகளின் ஒலியை வாரிச்சென்றது. அவர்கள் இருவரின்பேச்சு முறைகளும் ஏதோ நாடகத்திற்கு ஒத்திகை பார்த்துக்கொள்வது போலிருந்தது. உண்மையும் அதுதான். அதுவரை அவர்கள் நடித்து வந்த நாடகத்தின் ‘க்ளேமாக்ஸ்’ அதுதான். இனி நாடகத்தின் இறுதிக்கட்டம். கதாநாயகி சோகக்கட்டத்திற்கு வந்தாள். அல்லி-அலரி-மான்விழி-கயல் கண்-என்ற புகழ்ச்சிகளுக்கு இலக்காகிய கண்கள் நீர் தேங்கிக்கலங்கின. புறப்பட எத்தனிக்கும் அவன் கால்களைப்பற்றிய வண்ணம்:

அழகு:- “என்னேக் கைவிடாதீர்கள். முதன் முதலில் நான் சொன்னபோது, சாதி-குல உயர்வு தாழ்வுகளுக்கு நான் ஆளாகமாட்டேன் என்று கூறினீர்களே அத்தனையும் பொய்யா! என்னேச் சந்தித்தபோது—உல்லாசங்கொண்டாடியபோது-அல்லும் பகலும் அகலாதிருந்தபோதெல்லாம் குறுக்கிடாத சாதி குலம் ‘திருமணம்’ என்னும்போது தானு குறுக்கே நிற்கிறது. உங்களே நம்பி-உங்கள்வசமே என் வாழ்வு முழுவதையும் ஒப்பித்துவிட்டு-உங்கள் துணையின்றி வேறு துணையில்லையென்ற உறுதியுடன் நின்று மன்ருடுகிறேன் இன்னுமா உங்கள் மனம் இளகவில்லை.

இள:- “அழகு! நீ சொல்வதையெல்லாம் நானும் உணர்கிறேன். உன்னுடன் வாழ விரும்புகிறேன். ஆனுல் என் தந்தை பெரிய பணக்காரர். அவருக்குத் தலையிறக்கம் ஏற்படும்படி நான் நடந்து கொள்ளமுடியாது. என்னுல் அவருக்கு உயர்வுதேடித்தரமுடியா விட்டாலும் தாழ்வு நேரும்படி பார்த்துக் கொண்டிருக்க முடியாது.”

அழகு:- நான் அழிந்துபோவதுமட்டும் பொறுக்கமுடியுமோ? உங்கள் தந்தையும்-அவர் உயர்வும்-புகழும் குடிப்பெருமையும் நின்றிருக்கவேண்டும்: என் வாழ்வும் மானமும் பாழாகவேண்டும். இதுதான் உங்கள் நீதியா? காதலன் தரும் பரிசா? ஒவ்வொரு சமயங்களில் சாதி சமயங்களேயும், மத மாச்சரியப் போக்கையும், மக்களின் தாழ்வுநிலையையும் கூறி அவற்றை மாற்றியமைக்கவேண்டுமென்று கூறிய தங்களிடமா இத்தகைய சொற்களேக் கேட்கிறேன்.

இள:- முன்னர் நான் கூறியவற்றை மறக்கவுமில்லை. அவற்றை மறைக்கவும் விரும்பவில்லை. ஆனுல் அப்போது மிக எளிதாகத் தோன்றிய ஒரு செயல் இன்று மிகவும் கடினமாகத் தோற்றமளிக்கிறது. அதனல்தான் முடியாது என்று மறுக்கிறேன் உன்னே வெறுப்பதாலல்ல.

அழகு:- தங்களின் வாய்ச்சொல் மிகச் சுலபத்தில் முடிந்துவிட்டது. அது என் வாழ்வைச் சுட்டெரிக்கிறது என்பதை உணர்ந்தீர்களா? என்னே விபசாரியின் மகள் என்று மிக எளிதாகக் கூறிவிட்டீர்களே! இதுபோல்-உங்கள் போன்ருரால் கைவிடப்பட்டுக் கதியற்று தந்த இதயத்தைப் புனிதமான காதலுக்கு இடங்கொடுத்துக் காத்துவந்தார்களோ அதே இதயத்தை உடைத்தெறிந்துவிட்டு உயிருக்கும்மேலான கற்பையும் மானத்தையும் விற்கத் தலைப்பட்டவர்கள்தானே. மீண்டும் உங்களாலேயேவிபசாரிகளென்ற அழைப்புக்குஆளானர். அந்தப்பதத்திற்குப் பிறப்பிடமாகிய நீங்களோ அதேசொல்லின் உச்சரிப்பாளராகவும் மாறுகின்றீர்களே இது முறையா?

என்றிவ்வாறு பலப்பலவாகத் தன் இதயக் குமுறலுடன் பேசினுள். ஆத்திரமேலீட்டால் அவள் பேசினுள். ஆணவத்தால் ஒரு முடிவுக்கு வந்துவிட்ட அவன் ஓங்கி ஒரு அறை கொடுத்துவிட்டு அவ்விடம் விட்டகன்ருன். அதுதான் அவள்பெற்ற முதற்காதலின் கடைசிப்பரிசு. அதன்பின்னும் பேதைமனம் கொண்ட அவள் என்றேனும் அவன் தன்னே உணர்வான், நம்மை வந்து ஏற்றுக்கொள்வானென்று இலவின்சிவப்பை உறக்கா யென்று எண்ணிப் பழுக்கு மெனக் காத்திருந்த கிளிப்பேடானுள். அவன் அடித்த அடியும் அன்பளிப்பாகவே கருதினுள். ஆசையிழப்பின் அறுதி அறிவிப்புஅது என்றெண்ண அவள் மனம் துணியவில்லை. மெல்லமெல்ல நாட்கள் செல்லச்செல்ல அவள் தானுகவே தன் காதலுக்கு முற்றுப்புள்ளி வைத்துக்கொண்டாள்.

இவ்விதம் ஒருதலைக் காதலுக்கு உள்ளத்தை வாட்டிக்கொண்ட அவள் அப்போது தான் தாயின் சொற்களின் பெரும் பொருளேப் புரிந்துகொண்டாள். தாயாரும் என்னென்னவோ முயன்று “தன்மகளுக்குப் பணமிருந்தாலாவது வருங்காலத்தில் வாழ்க்கையை வருந்தாமல் களிப்பாள்” என்ற எண்ணத்தோடு, பலரின் தயவைத் துணையாகக்கொண்டு அவளே ஒரு நடிகையாக்கிவைத்தாள். அவள் நடிப்புத்துறையில் செல்லப்புகுந்ததும் தாய் தன் கடமையைச் செய்யத்தவறவில்லை. அருமை மகளே! ஆரம்பத்தில் நான் உனக்குக் கூறிய மொழிகளும் அதன் பயனும் அதற்குள் மறந்திருக்கமாட்டாய். மீண்டும் சொல்கிறேன்; நன்ருகக்கவனத்தில் வைத்துக் கொள். காதலென்ற ஒரே வார்த்தையைக் கொண்டு உலகில் பலர் சூதாட்டம் ஆடுகிருர்கள். சூதாட்டக்காரர்களில்எவருக்காவதுதான் தோற்றுவிட வேண்டுமென்ற எண்ணமிருக்குமோ, அல்லது தோற்றவர்கள்மீது இரக்கந்தான் ஏற்படுமோ-அதுபோலவேதான் இவர்களும். அங்காவது சிலர் தோற்றவருக்குப் பரிவுகொண்டு பெற்றவற்றில் சிறிது பொருளுதவுவார்கள், இங்கோ பறிப்பாருண்டே தவிற, பரிவோ பச்சாத்தாபமோ கொள்ள மாட்டார்கள். பங்குபெறமாட்டார்கள். மாருக இழித்தும் பழித்தும் பேசுவார்கள். இப்படிப் பட்டவர்கள் நடுவேதான் நாம் வாழுகிறேம். ஆதலால் சபல எண்ணங்களுக்கு மனதைப்

28 29

One side of the page is dark

பரிகொடுத்துச் சஞ்சலத்தைக் கைக்கொள்ளாதே! உண்மையன்புடையவர்களைப் பெறும்வரை மனதை இரும்பாக்கிக்கொண்டு வாழ்க்கையை நடத்து என்று பலவாறு எடுத்துக்கூறி, அந்தப் புதிய உலகிற்கு மகளை வழியனுப்பிவைத்தாள். மகளும் அதன்படியே நடந்து வெற்றிபெற்ருள். இப்போது அவள் அழகு வடிவல்ல. அழகி. ஓரளவு உலகையும் புரிந்து கொண்டாள் தாயின் துணைகொண்டு. பல லக்ஷங்களுக்கு அதிபதியானுள். அவள் தேடிச்சென்று காணமுடியாதவர்களெல்லாம் அவளைத்தேடிவந்து காணமுடியாது திரும்பினர். இந்நிலையில் அவளுக்கும் ஒரு காதலன் ஏற்பட்டான். அவனின் உண்மை நிலைப்பையும் நிலையையும் கண்டு, அவன் காதலில் களங்கமில்லை யெனக்கொண்டு திருமணமும் செய்துகொண்டாள். அப்போதைய அவள் நிலையில் அவள் செயல் எதுவானுலும் அதுவேசரி என ஒப்புக்கொள்வோரின் தொகையே அதிகம். தன்னைக்கைவிட்டோடிய காதலன் வீட்டு விழாவிற்குக் கூட அவள் அழைக்கப்பட்டிருந்தாள். அவளை யாரென்று அறியாத காரணத்தாலேயே அழைத்தார்கள். போயிருந்தஇடத்தில் அவனுக்கும் புத்தி புகட்டினுள். "ஒருநாள் இரவு தங்கிப்போகும்படி இளவழகன் வேண்டினுன். தான் தாசியின் மகள்-அதனுல் உங்களுக்குக்களங்க மேற்பட்டுவிடு மென்று அவள் மறுமொழி கூறினுள். தங்களின அந்தஸ்திற்கும் தகுதிக்கும் தாங்கள் இங்கு தங்குவதானுல் இவ்வீடு புண்ணியபீடமாகிவிடுமே என்று புகழ்ந்தான். அப்போது, அவனுக்குப் பழைய நிலையையும் அடித்த கன்னத்தையும் காட்டி அவன் சொற்களை அவனிடமே திரும்பக் கொடுத்தாள். வெட்கமும் வேதனையும் தாக்க அவன்வாளா இருந்தான். எனினும் அவள்யாரென ஊரவரிடம் இழித்துக் கூறமுற்பட்டான். தன் உயர்வையும் திறனையும் உணர்வதற்கு இந்தச் சமுதாய மக்களுக்குத் திறனில்லாவிட்டாலும் தங்கள் திறனை முழுதும் பயன்படுத்தி நம்மைப் பழிக்கிருர்களே என்று ஆத்திரம் கொண்டாள் அவள். ஆத்திரம் செயற்படத் தொடங்கிற்று. விழாவில் கலந்துகொண்டபின்னர் பழிவாங்குதலைத் தன் பணியாகக்கொண்டு விரைந்தாள். அதையன்றி வேறுசிந்தனையின்றிச்சுழன்ருள். பணத்தையும் சட்டத்தையும் காட்டியே பிறரை வெருட்டிவாழும் கூட்டத்தைக் குறைக்க முற்பட்டாள்.

ஒருநாள் பத்திரிகையில் ஒருவிளம்பரம் வெளியாகியிருந்தது அதாவது: பல லக்ஷங்களின் சொந்தக்காரியான ஒருவளுக்குத் தன் தந்தையைக் காணவேண்டுமென்ற விருப்பமிருப்பதாகவும்-தான் அவரைக்கண்டு தன் சொத்துக்களெல்லாம் அவர் உடைமையாக்கி அவர்தம் பராமரிப்பிலிருக்க விரும்புவதாகவும் தங்களுடைய பழைய முகவரியும் தற்போதைய முகவரிவும் குறிப்பிடப்பட்டு அவரைக்காண அதிக ஆவலுள்ளவளாக இருப்பவளாகவும் வெளியிடப்பட்டிருந்தது. அதன்படி வரும் தந்தையை விசாரித்துப் பதிவுசெய்துகொள்ள வழக்கறிஞர் நீதிபதி ஆகியோர் அமர்ந்திருந்தனர். விளம்பரம் வெளியிடப்பட்ட மூன்று தினங்களுக்கெல்லாம் தந்தையைக் காண ஆர்வங்கொண்ட மகளுக்கெதிரில் தோன்றிய தந்தையர்க்குப் பாராட்டும் விருந்தும் நடத்த வேண்டு மென்பதன்பேரில் ஒரு பெரிய ஹோட்டலில் அந்த ஹோட்டல் முழுவதையும் ஒப்பந்தம் செய்யப்பட்டிருந்தது. "அவளுக்கிருக்கும் பணத்தில் அதுபோன்று எத்தனையோ ஹோட்டல்களை மாதக்கணக்கில்கூட ஏற்பாடு செய்யலாமே" என்று ஊரார் பேசிக்கொண்டனர். விருந்து தொடங்கிற்று. விருந்துக்குப் பலதரப்பட்டோரும் வந்திருந்தனர். ஆனுல் மிக முக்கியமாக அப்போதைய உயர் நீதிமன்றத்தின் தலைவர்களும் துணைவர்களும் பெரும் பெயர் பெற்ற வழக்கறிஞர்களும் மிகுந்த முயற்சியின்பேரில் அழைக்கப்பெற்றிருந்தனர். சிறந்த நடிகையின் வீட்டிலே விருந்து. ஊராரின் கூட்டத்திற்குக் கேட்கவாவேண்டும். எத்தனை பெருந்திரள் வந்தாலும் அத்தனைபேரும் அமர்ந்திருப்பதற்கு வேண்டிய இடவசதியும் செய்யப்பட்டிருந்தது. விருந்துக்கு வந்தவர்கள் விருநதையுண்டு விருந்தின் அருமையையும் அதற்குத் தக்கவளான விருந்து நடத்துபவளின் பெருமையையும் பாராட்டினரே தவிர விருந்து நடத்துவோரின் உள்ளத்தை யாரும் கருதவில்லை. விருந்திற்குப்பின் தன் நோக்கத்தை வெளியிட்டாள் விருந்தின் அமைப்பாளி. 'நான் கடந்தபல ஆண்டுகளாக என் தந்தையைக்காணுது தவித்தேன். இன்று அவரைக் காணப் போகின்ற மகிழ்ச்சியின் பங்கை யாவரும் மகிழவேண்டுமென்ற எண்ணத்துடனேயே இந்தவிருந்தை ஏற்பாடு செய்தேன். இனி தந்தையைக் காணுவேன்'' என்று அவள்கூறியதும் "என்ன மனமடா இது. இதுவரைக்கும் தந்தையைக் காணுது இருந்துவிட்டு இனிமேல் காணப்போகிருளாம். வந்த உடனே கண்டிருக்கவேண்டாமோ'' என்றனர். ஆ! தந்தையையாவது காண்பதாவது. எல்லாம் வெளிப்பகட்டப்பா. இந்தக்காலத்தில் தந்தையைக் காணத்தான துடிக்கிருர்களாக்கும். தந்தை ஒழிந்தால் போதுமென்றிருக்கிருர்கள். உம்...எந்த இன்கம்டாக்ஸீக்கு கணக்குக்காட்டவோ'' என்று பேசிக்கொண்டனர் சிலவாடிக்கைக்காரர்கள். "அதெல்லாம் இப்போது நடவாது, என்னதான் கணக்குக்காட்டினுலும் இப்போவந்திருக்கும் ஆபீஸர் மிகவும் கண்டிப்பான பேர்வழி'' என்று தானறிந்த சில செய்திகளுக்குக் கண் கால் கை ஒட்டவைத்து உருவாக்கி உருட்டினர் திடீர் அபீஸர் அவதாரிகள். இவையெல்லாம் ஓர் புறமாக, மேடையின்மீது நிகழ்ச்சி முறையே நடைபெற்றுக் கொண்டிருந்தது.

முன்னேற்பாட்டின்படி அறைகளில் தங்க ஏற்பாடுசெய்திருந்த அப்பா முறையினர் அழைக்கப்பட்டனர். வழக்கறிஞரும் தமக்குத் தெரிவித்திருந்தபடி ஒவ்வொருவரையும் விசாரித்தார். ஒவ்வொருவரும் தனித்தனியே விசாரிக்கப்பட்டு, மீண்டும் அறைக்கே அனுப்பப்பட்டுவிடுவார்கள். இவ்விதம் விசாரணை நடந்தபிறகு கணக்கெடுக்கப்பட்டதில் ஏறத்தாள முப்பதுக்கு மேற்பட்டவர்களிருந்தனர். அவரவர்களும் தாங்கள்தான் தந்தை என்பதற்குரிய ஆதாரங்கள் காட்டினர். அறைக்குள் இருப்பவர்களோ "சோதிடன் தனக்குக் கூறிய சுக்கிரதிசைவரும் நாள் இதுதான்'' என்று எண்ணுபவர்களும், "பத்திரிகையின் ராசிபலனில், 'அநேக பணவரவு' என்று போடப்பட்டிருந்ததின் உண்மையையும், புறப்படும்போது காகம் வலம்போனது, பால்காரக் கன்னி எதிர்வந்தது, நல்லசகுனப்பூ கைக்குக் கிடைத்ததுபோன்ற சாதக நிகழ்ச்சிகளை எண்ணமிடுபவர்களும், வலதுகண் துடிப்பு உள்ளங்கை அரிப்பு, மேனியில் மச்சம்,மூக்கில் செல்லும் காற்றின்படி சராசரி, கண்டகனவின் விளக்கம் ஆகியவற்றை எண்ணிமகிழ்பவர்களும், ஞானியாரிடம் பெற்றதாயத்தின் மகிமையை எண்ணிக்கண்ணில் புதைப்போரும், பக்கத்து வீட்டுக்காரரின் சொற்படிபுதுத் தெய்வ ஆராதனையால் வந்த பலனென்றும் எண்ணிப் பரவசமடைவாருமாக இருந்தனர். யாவும் முடிந்தபின் விருந்துக்குரியவள் பேசத் தொடங்கினுள். பெரியோர்களே! இங்கு நடைபெற்ற நிகழ்ச்சிகளிலிருந்து இந்தவிருந்தின் காரணத்தை ஓரளவு உணர்ந்திருப்பீர்கள். நான் தாசியின் மகளென்றும், இந்தச் சமுதாயத்தில் நல்லமுறையில் வாழ முனைந்தாலும் முடியாதென்ற நிலைக்கும் ஆளாக்கப்பட்டேன். ஓரளவு பணத்தின் பெருக்கத்தால் உங்களையெல்லாம் இங்கே ஒருங்கே நான் காண முடிகிறதேயல்லாமல், சாதாரணமாக எளிய நிலைமையில் நானிருந்தால் தங்களால் காரியத்திற்கன்றி, காரண மற்றமுறையில் ஏரெடுத்தும் பார்க்கப்படமாட்டேன். தாசி—தாசிமகள்... இந்த இரண்டுசொற்களால்மட்டுமே ஒரு இனத்தைவாழவிடாமல் செய்யும் இந்தச் சமுதாயம், என்னையும் தீண்டிய காரணத்தால்-அதன் தீண்டுதலால் நான்மீளா வேதனை பெற்ற காரணத்தால் ஏற்பட்ட பழிதுடைக்கும் ஒரேநோக்கத்துடனேயே இந்த விருந்தை ஏற்பாடு செய்தேன். நீங்கள் கண்டீர்கள் இங்கேதோன்றி என் தந்தை என ஆதாரங்களுடன் விளக்கம் கூறியவர்களை. அவர்கள் மொத்தம் முப்பதுபேர். ஒருத்திக்குத் தந்தை முப்பதுபேர். அதுவும் ஆதாரங்களுடன். அவர்களெல்லாம் மிராசுதாரர்கள்-தேவதாசி எனத்தீண்டிய திருமேனிகள்-மதத்தின் தலைவர்கள் - மடாதிபதிகள்-பெருந்தனக்காரர்கள்-உயர்ந்த குடியினர்.

இவர்கள் ஏன் இன்று இவ்வாறு வெளிப்படையாக என்தந்தை என்று ஒப்புக்கொண்டார்கள்! பணத்திற்கு. இந்நிலையில் இவர்களின் மகளான என்னை இவர்கள் குலவழியிலேயே திருமணம் செய்துகொடுக்க நான் கேட்டிருந்தால், இப்போது ஒருவேளை ஒப்புக்கொள்ளலாம். பணத்திற்குத்தான் பலவும் செய்யும்வலிமை இருக்கிறதே! ஒரு ஏழையாக நானிருந்தபோது? நானும் இவர்களைப்போல் பணத்தை அடையவிரும்பி இருந்தால் இவர்களில் யார் அதிகத் தனவந்தரெனக் கண்டு அவர்பக்கம் சார்ந்திருப்பேன். என் எண்ணம் அதுவல்ல. இப்படியே வழி வழி செய்து பழக்கப்பட்டுப் போன இவர்கள்செயலுக்கு முற்றுப்புள்ளிவைக்கவேண்டும். இவர்களைத் தனிமையில் சந்தித்தாலும்கூட அந்த நிகழ்ச்சிக்கும் ஒரு சப்பைக் கட்டு கட்டி, தங்களுக்குத் தாளம்போட இருக்கும் ஒரு கூட்டத்தைக்கொண்டு இன்னும் இழிவு பேசுவார்கள் என்ற காரணத்தால்தான் அசைக்கமுடியாத, மறைக்க மறுக்கஇயலாத,திட்டத்தை அமைத்துக்கொண்டேன். உயர்நீதிமன்றத் தலைவர் அவர்கள் முன்னிலையில், பிரதம பதிவாளரிடம், பத்திரத்தில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது இவர்களது வாக்குமூலங்கள். இவற்றுக்குச்சாட்சி வழக்கறிஞர் பலரும், நீதிமன்றத் துணைவர்களும், பொதுமக்களாகிய நீங்களும். இத்தகைப் பெருந்தன்மையினர் கூறுகின்றனர் என்னை வியபசாரி என்று. வியபசாரத்திற்கு வித்திட்டு அதன் விளைபோகமும் கண்டவர்களுக்குப் பெயர் பெரிய மனிதர்கள். மற்று மொன்றும் கூறிக்கொள்ள விரும்புகிறேன்; 'தாயறியாச் சூலில்லை' என்பது போல இவர்களுக்குள் எவரும் என்தந்தையல்ல. என்தந்தை ஒரு ஏழை. நல்லஇதயம்

படைத்தவர். இளமையால் ஒன்றுபட்டுவிட்ட அவருக்கு நான் பிறந்தேன். இத்தகைய நல்ல மனிதர்களின் அந்தஸ்த்துக்கிடையே அவரெனக்குத் தந்தைஎன்று கூறிக்கொண்டு எவ்வாறு உயிர்வாழமுடியும்? எனவே, என்தாயே கொஞ்சம் பணங்கொடுத்து அவரை வேற்றூருக்கு அனுப்பிவிட்டார்கள். அவரைத் தேடிப் பிடித்துக்கொண்டுவர ஏற்பாடுகள் செய்திருக்கிறேன். அவர்வருவார் - அவரை அப்பா என்று வாய்குளிர அழைத்து மகிழ்வேன். அவற்குள் இவர்களின் செயலுக்கு ஒருபாடம் கற்பிக்க எண்ணியே இத்தகைய ஏற்பாட்டைச் செய்தேன். விழாவில் கலந்துகொண்ட உங்கள் அனைவருக்கும் என்நன்றி; என்று கூறிமுடித்தாள். விழாபற்றிய பேச்சு ஊரெங்கும் பரவியது. அப்பாமுறை காரர்கள் தங்கள் இருப்பிடம் சேர்ந்ததும் காற்றிலே மிதந்த செய்தி காதிலே பட்டகாரணத்தால் பலரும் பலவாறு அவர்களைக் கேட்கத் தலைப்பட்டனர். அவர்கள் தலைகவிழ்ந்தனர்.

ஏனையோரின் கேள்வி அவர்களைத் தலைகவிழச் செய்ததென்றாலும், சமுதாயத்தைக் கண்டே தலையிறக்கம் கொள்ளவேண்டிய நிலைக்கு அவர்கள் மாற்றப்படவில்லை. தங்கள் தோல்வியையும் ஒருவெற்றியாக அவர்கள் பயன்படுத்தினர். பொதுவாகவே ஊர்ப் பெரியமனிதர்கள் என்று கூறப்படுபவர்கள் அனைவரும் ஒருங்கே கூடும் இடம் ஒவ்வொரு ஊரிலும உண்டு. அத்தகு திருஇடங்கள் யாராலும் அத்தகையோர்க்காக அமைக்கப்பட்டதல்ல எனினும் அவற்றைப் பயன்படுத்திக் கொள்வது வழக்கம். காரணமின்றியே பெரியமனிதர்களாய்விட்ட அவர்களால் அங்கேகூடிச் செய்யப்படும் முடிவுகளெல்லாம் கேடுபயப்பனவாகவே இருக்குமேன்றி நன்மையின் தொடர்பு கொண்டதாகவே இராது. அவர்கள் நல்லவர்களாக இருந்தாலல்லவோ!

அந்தத் திருமேனியர் மன்றிலே சென்னை அழகியின் பூர்வாங்க வரலாறுகளையும் நிகழ்ச்சிகளையும் தங்கள் ஆத்திரமும் அவமானமும் தாக்கப் பேசிமுடித்தனர். அதில் அழகியை விழாவிற்கு அழைத்து-இரவுத்தங்கலுக்கு வேண்டிக்கொண்டு, வேண்டுகோள் மறுக்கப்பட்டு வெட்கமடைந்த இளவழகனும் ஒருவன். அவனும் தன் காதல் பிரதாபங்களையும் தன் மறுப்புரையையும் காரசாரமாகப் பேசித்தீர்த்தான். இவற்றுக்கெல்லாமிடையே அழகியின் அபிமான ஆதரவாளர்கள் பலர் முரட்டுத்தனமாகச் சில மறுப்புரை தநதனர் எனினும் அவர்கள் குரல் எடுபடவில்லை.

எத்தனைதான் அவள் இன்பமாக வாழ்ந்தாலும் எவ்வளவு நிறைந்த பணத்தின் சொந்தக்காரியாக இருந்தாலும் சமுதாயம் அவளைச் சேர்த்துக்கொள்ள மறுத்தது. சமுதாயத்தின் உறவு பெற்றுத்தான் வாழவேண்டுமென்ற நிலையில் அவள் இல்லையாயினும், அப்படி வெறுத்தொதுக்கும் சமுதாயத்தின் வீண் வீராப்புச் செயல்கள்மட்டும் அவளை உறுத்திக் கொண்டிருந்தது. எனவே அவள் தன் வரையில் சாதித்துக்கொண்டவற்றை, தன்னைப்போலவே தங்களால் ஏதும் செயலாற்றலற்ற நிலையில் நைந்து நலிந்து வதங்கி வாடித் தவிக்கும் பெரும்பான்மையோருக்குப் பயன்படுத்த எண்ணினாள். நினைவைச் செயலாற்றவும்-அவர்களும் தன்போன்று விடுதலையுடன் வாழச்செய்யவும் அவளால் இயலவில்லை.

தன்கைப்பணத்தைக்கொண்டு வேலையாட்கள் சிலரை அமர்த்தி அவர்களின் மூலமாகப் பெண்குலத்தை இழிநிலைக்கு இழுத்தேகும் இதய மற்றவர்களைக் கண்டுபிடிக்கச்செய்து-அவர்களைச் சர்க்காரிடம் ஒப்புவித்துத் தண்டிக்க ஏற்பாடுகள் செய்தாள். அதன்பயன் மீண்டும் மிகப்பலர் வியசாரப்பட்டியலின் எண்ணிக்கையில் அதிகமாக்கப்டனரேயன்றி அகற்றும் வழியைக்காணோம். சிந்தித்தாள். ஒரு முடிவிற்கும் வர இயலவில்லை அவளால். மேலும் குற்றம் சாட்டுவோர் பெண்ணினத்தையே மிகுதியும் குற்றம் சாட்டினர். ஆனால் உண்மைக் குற்றவாளி யாரென்று காண எவரும் முயலவில்லை, முன்வரவில்லை.

சமுதாயத்தின் திமிர்ப்பேச்சில் இப்படிஒரு சாதியை அமைத்தவர் குற்றவாளியா? எவ்வளவு பாடுபட்டாலும் தாம் வாழவும் முடியாது-விரும்பி மடியவும் முடியாத நிலையில் தன்னை விற்பதென்ற தீர்மான முடிவுடன் விலைமாதர் என்ற முன்னுரையுடன் வாழ்வை வீழ்த்திக்கொள்வோர் குற்றவாளியா? அல்லது தண்டித்துத் தண்டம் விதிப்பவர்கள் மேலும் இதுபோன்று நடைபெறுவண்ணம் காவாதவர்கள்குற்றவாளியா? யார்குற்றவாளி?

இத்தகைய கேள்விகளை அவள் உள்ளம் கேட்டுக்கொண்டே இருந்தது. ஆனால் உலகம் அவள்தான் குற்றவாளி குற்றவாளி என்று கூறிக்கொண்டே இருந்தது. இந்த நிலையை மாற்றியமைக்க அரசினர் முற்படும்வரை இந்த ஏதும் இயலாதார்தான் குற்றவாளி.

சில நாட்களிலெல்லாம் அழகியின் தந்தை வந்துசேர்ந்தார். அப்பாவும் மகளும் உள்ளூற அழைத்து மகிழ்ந்தனர். கணவனும் மனைவியும்-பிள்ளையும் பெற்றோரும் இனிது வாழ்ந்தனர்.



# வினாவும் விளக்கமும்

**வினா:** கதிரவனும் கதிரொளியும் ஒன்றோடொன்று பிரியாதிருப்பதைப்போல இறைவனும் அருட்சக்தியும் என்றும் பிரிவிலாதிருப்பதையே இறைவன் - இறைவி என்று முன்னைப் பேரறிஞர்கள் உணர்த்தினார்கள். அம்மையப்பன் மாதொருபாகன், அர்த்தநாரீச்வரன் என்னும் தத்துவம் இதைத்தான் அன்பர்கட்கு உணர்த்துகிறது. இவ்வுண்மை பலநாலும் விளக்கப்பட்டிருந்தும் “கடவுளுக்குப் பெண்டாட்டி ஏன்?” என்று தாங்கள் கிண்டல் செய்வது நியாயமா? உங்கள் கூட்டத்தாரல்லாத மிகப் பெரும்பான்மையோருடைய பரம்பரையான உணர்ச்சி நிறைந்த உள்ளங்களைப் புண்படுத்துவதால் யாருக்காவது நன்மை உண்டா?

**விளக்கம்:** அண்டத்திலுள்ள பொருள்களுக்கும், அண்டத்தில் நிகழும் நிகழ்ச்சிகளுக்கும் காரிய காரண விளக்கத்தைத் தொடர்ச்சியாக அறிந்துகொண்டே போகும்போது, அடிப்படை ஆற்றல் ஒன்று இருக்க வேண்டும் என்று ஊகிக்கப்படுகிறது. அந்த ஊகம் பொருத்தமான ஊகந்தான். அதை மறுத்துரைக்க நாம் முற்படவில்லை. அந்த ஆற்றல் எத்தன்மையது என்று திட்டவட்டமாகத் தெரிந்து கொள்வதற்கு மனம்—மொழி—மெய்களால் இயலாமல் இருப்பதன் காரணமாக, அது ‘மனம்—மொழி—மெய்களைக் கடந்த ஒன்று’ என்னும் பொருள் தரும்படியான ‘கடவுள்’ என்ற பெயரிட்டு அழைக்கப்படுகிறது என்பதை முன்பே கண்டோம். அந்தக் ‘கடவுள்’ மின்னாற்றலைப் போல, வெபப ஆற்றலைப் போல, காற்று ஆற்றலைப் போல ஒரு தனிப் பெரும் அடிப்படை ஆற்றலாக இருக்க முடியுமே ஒழிய, மனிதனைப்போல் சிந்தித்து முடிவு செய்யும் உள்ளம் படைத்த ஒன்றாக இருக்க முடியாது என்பதையும் முன்னரே கண்டோம்.

வெறும் அடிப்படை ஆற்றல் மயமாக இருக்கக்கூடிய ‘கடவுள்’ ஆகிய ‘இறைவன்’ அருட்சக்தி உடையவன் என்று கருதுவது, அறிவாராய்ச்சிக்கு எவ்வகையிலும் பொருந்தி வரக்கூடியதல்ல. ‘கடவுளு’க்கு அருட்சக்தி உண்டு என்று கூறுவது சமயவாதிகளின் குருட்டுத்தனமான கற்பனையே ஒழிய, ஐம்புலனறிவாலும், சிந்தனையறிவாலும் கண்டுகொள்ளப்பட்டதொன்றல்ல. அப்படிக்கண்டுகொள்ளப்படுவதற்கு உரியதாக அது இருக்குமேயானால், அது ஐயப்பாட்டிற்குரியதாக ஆகியிருக்காது; எல்லோராலும் ஒரே மனதாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கும். சமயத்துறையில் செல்வாக்குப்பெற்று வளர்ந்த சிலர், தம் மனதிற்குத் தோன்றியவாறு கற்பனைசெய்து, அந்தக்கற்பனையை நம்பும்படி தம்மைப் பின்பற்றுவோரிடம் கூற, அவர்கள் அப்படியே நம்பிவருகிறார்கள் என்பதைத்தவிர, இது பேரறிஞர்கள் அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டதென்றோ, உணர்த்தப்பட்டதென்றோ கொள்வதற்கில்லை.

‘கடவுளி’டம் அருட்சக்தி உண்டென்று நம்பிக்கை செலுத்தும் உலகிலுள்ள பல்வேறு சமயத்தாரும், தத்தம்போக்கில், பல்வேறு விதமாகத்தான் ‘கடவுளை’ப்பற்றி நம்பிக்கை கொண்டுள்ளார்கள். இந்து சமயத்தைச் சார்ந்தவர்களைத்தவிர, மற்ற சமயத்தார் அனைவரும், ‘கடவுளு’க்கு அருட்சக்தி உண்டு என்று வேண்டுமானால் நம்புவார்களேயல்லாமல், அதனை இறைவன்—இறைவி தோற்றத்தில் காண்பதுமில்லை; உணர்த்துவதுமில்லை.

‘கடவுளு’க்கு அருட்சக்தி உண்டு என்று ஒப்புக்காக வைத்துக்கொண்டு பார்த்தாலும், அவையிரண்டும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிய முடியாதவாறு ஒன்றாக இணைந்திருக்கின்றன என்பதை உணர்த்த இறைவன்—இறைவி என்ற தத்துவம் எந்த அளவுக்குப் பொருந்தி வருகிறது அல்லது பயன்படுகிறது? ஆண்—பெண் கணவன்—மனைவி, இறைவன்—இறைவி ஆகிய சொற்றொடர்கள், இரண்டு பேர்கள் தனித்தனியே பிரிந்து இருந்து உறவு கொள்ளுவதை உணர்த்துபவைகளேயல்லாமல், ஒருவரிலிருந்து ஒருவரைப் பிரிக்க முடியாது என்பதை உணர்த்துபவைகள் அல்லவே!

எந்தத் தத்துவத்தை உணர்த்துவதற்காகக் 'கடவுள்', அம்மையப்பனை, மாதொரு பாகனை அர்த்த நாரீச்வரனைக் காட்டப்படுகிறுர் என்று அருள்நெறித் திருக்கூட்டத்தார் வாதிட்டு நிற்கிருர்களோ, அந்தத் தத்துவந்தான், 'கடவுளை' இறைவன்—இறைவி தோற்றத்தில் காணும்போதெல்லாம், பக்த கோடிகளுக்கு ஏற்படுகிறது, என்று சொல்ல அவர்களுக்குத் துணிவுண்டா? இல்லையே!

"கடவுளுக்குப் பெண்டாட்டி ஏன்?" என்று கிண்டல்செய்வது நியாயமா? என்று திருக்கூட்டத்தார் பகுத்தறிவாளர்களைப் பார்த்துக் கேட்கின்றனர். "நியாயம்; முழுக்க முழுக்க நியாயம்" என்றுதான் அதற்கு நாம் விடையிறுக்கவேண்டியவர்களாக இருக்கிருேம். கேலியும் கிண்டலும் அடுக்கடுக்காய்ப் புரிய வேண்டிய அளவுக்குத்தான் மூடப்பழக்க வழக்கங்களும், குருட்டு நம்பிக்கைகளும், ஆபாசங்களும் இறைவன்—இறைவி பற்றி உணர்த்தும் மேற்சொன்ன வழிகளிலெல்லாம் நிரம்பிக்கிடக்கின்றன. இறைவனை ஆண் கோலத்திலும் இறைவியைப் பெண்கோலத்திலும் வைப்பது, சாமி சன்னதி அம்மன் சன்னதி என்று தனித்தனி அறைகள் வகுப்பது, கணவன் மனைவி முறையில் திருக்கல்யாணம் செய்வது, இரவில் படுத்துக்கொள்ளப் பள்ளிஅறை அமைப்பது, அவர்கள் இருவரையும் பள்ளியறையில் படுக்கவைப்பது, பள்ளியறையில் திண்டு தலையணை மெத்தைபோட்ட தங்க ஊஞ்சலில் அவர்கள் இருவரையும் படுக்கவைத்து ஆட்டிவிடுவது, அவர்கள் புணர்ச்சியில் ஈடுபடுவதை வேறு யாரும் பார்க்காமலிருக்கும்பொருட்டு பள்ளியறைக்கதவுகளை இழுத்துச் சாற்றுவது, காதல் களியாட்டத்திற்கிடையே களைப்பு ஏற்பட்டால் அவர்கள் உண்ண பாலும் பழமும் பள்ளியறையில் வைப்பது, அவர்கள் காலையில் நீண்டநேரம் தூங்கிவிடாமல் தடுக்கப் பள்ளிஎழுச்சி பாடுவது, அவர்களுக்குக் குழந்தைகள் பிறப்பது, இறைவன் இறைவியைத் திருமணம் செய்துகொள்ள காதற் களியாட்டங்கள் அனைத்தும் நடத்துவது, இறைவன் இரண்டு மனைவிகளை மடியில் வைத்துக்கொண்டு அணைத்துக்கொள்வது, பல மனைவிகளைத் திருமணம் செய்துகொள்வது, மனைவியர்க்குத்தெரியாமல் இறைவன் வைப்பாட்டி வீடுகளுக்குச்செல்வது, இறைவன் பெண்வேடம் தாங்கிய ஆண்சாமியையே புணர்ச்சிக்கு அழைப்பது, இறைவன் விலங்கு உருக்கொண்டு விலங்குகளைப் புணர்வது, மனைவியைப் பறிகொடுப்பது, மனைவிக்காகப் புலம்புவது, மனைவிமீது ஐயங்கொள்வது போன்ற இவைகளெல்லாம் தத்துவத்தையா உணர்த்துகின்றன? அல்லவே! ஆபாசங்களை அல்லவா அள்ளிக்கொட்டுகின்றன! இவற்றைப்பற்றியெல்லாம் கேலியும் கிண்டலும் செய்வது எப்படித்தவருகும்? மக்கள் நல்லறிவையும், நல்லாற்றலையும், நல்லருளையும், நற்பண்பையும் மதித்துப், போற்றி, வளர்த்துப், பயன்படுத்துவதை நாம் மறுக்கவில்லை, தடுக்கவில்லை; எதிர்க்கவில்லை; அழிக்கவில்லை. அறிவையும், அருளையும் மேற்கண்ட இறைவன்—இறைவி பற்றிய ஆபாசங்கள் மூலம் தான் உணர்ந்துகொள்ளமுடியும் என்றால், அது தவறு என்கிருேம். பொதுவாக ஆபாசக்கற்பனைகளும், மூடப்பழக்கங்களும், குருட்டு நம்பிக்கைகளுந்தான் உணரப்படுகின்றனவேயல்லாமல், அறிவோ, அருளோ யாருக்கும் புலப்படுவதில்லை. அறிவையும் அருளையும் இறைவன்—இறைவி பற்றிய கற்பனை ஆபாசங்கள்மூலம் அறிந்துகொள்வதைவிட, நாணயமான, நேர்மையான, உண்மையான, நல்ல வாழ்க்கையிலிருந்து நேரிடையாக அறிந்துகொள்வது எவ்வளவோ நன்மை பயக்குமே! இதனைவிடுத்துத் தத்துவத்தின் மூலம் உணரத் தலைப்படுவானேன்?

"உங்கள் கூட்டத்தாரல்லாத மிகப் பெரும்பான்மையோருடைய பரம்பரையான உணர்ச்சி நிறைந்த உள்ளங்களைப் புண்படுத்துவதால் யாருக்காவது நன்மை உண்டா?" என்று 'திருக்கூட்டத்தார் வினவுகின்றனர். நாம் யாரையும் புண்படுத்த வேண்டும் என்று கருதிக்கொண்டு கிண்டலும், கேலியும் செய்வதில்லை. ஆனால் வைதீகர்கள, தம்மை அவை புண்படுத்துவதாக எண்ணிக்கொண்டு வருந்துகிருர்கள் என்ருல், அது அவர்களுடைய குற்றமே ஒழிய நம்முடையதல்ல. நமது கேலியும் கிண்டலும் தம்மைப் புண்படுத்துவதாக எண்ணி யாரேனும் வருந்துகிருர்கள் என்ருல், அது அவர்கள் அவ்வளவு உறுதியற்ற உள்ளத்தையும் — கொள்கையையும் கொண்டிருக்கிருர்கள் என்று பொருள். நாம் செய்யும் கிண்டலும், கேலியும் மக்களை, அவர்கள் மத நம்பிக்கைகளிலே கொண்டுள்ள மதிப்பை இழக்கும்படி செய்து, பகுத்தறிவாளர்களாக மாற்றுவதற்கு எவ்வளவோ துணைபுரிகின்றன. கிண்டல் கேலி காரணமாக முதலில் புண்படும் உள்ளங்கள்தாம், நாளடைவில் அறியாமை அகன்ற பகுத்தறிவு உள்ளங்களாக மாறியிருக்கின்றன. அந்த வகையில் கிண்டலும், கேலியும் எவ்வளவோ நன்மை புரிந்திருக்கின்றன என்பதை அருள்நெறித் திருக்கூட்டத்தார் உணர்வார்களாக!



# அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் அன்பழகன்

நான் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் இடைநிலை வகுப்புக்களில் பயின்றுகொண்டிருந்தபோது, சுயமரியாதை-நீதிக்கட்சிக் கருத்துக்களைப் பரப்புவதில் மிகத் தீவிரமாக ஈடுபட்டிருந்த இளைஞர் தோழர் க. அன்பழகன் ஒருவரேயாவார்.

அப்பொழுதெல்லாம் சுயமரியாதை இயக்கக்கொள்கைகளில் எனக்கு ஆழ்ந்த பற்றுஉண்டு என்றாலும், இயக்கப்பணிகளில் நேரிடையாகப் பங்கு கொள்ளவோ, மேடைமீது ஏறிப்பேசவோ செய்யமாட்டேன். நான்காவது ஆனர்சு வகுப்பில் நான் புகுங்காலம் வரையில் எனக்கு மேடையேறிச் சொற்பொழிவாற்றத்தெரியாது. ஆனால், தோழர் அன்பழகன் அவர்களுக்கு உறுதுணையாக நிற்பதில் நானும், பிற இயக்க நண்பர்களும் ஈடுபட்டிருந்தோம்.

தோழர் அன்பழகன் அவர்கள் எப்பொழுதும் யாரோடாவது இயக்கக் கருத்துக்கள் பற்றி வாக்குவாதம் புரிந்துகொண்டேயிருப்பார். கல்லூரியின் வகுப்பு அறைகள், தாழ்வாரங்கள், பூங்காக்கள், சொற்பொழிவுமன்றம், விளையாட்டுமைதானம், மாணவர்விடுதி, சாலைகள், மரநிழல்கள் ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றில் நின்றுகொண்டு பிறரோடு பேரிரைச்சலுடன் வாக்குவாதம் செய்துகொண்டிருப்பதை எப்பொழுதும் காணலாம். ஒருவர் இயக்கத்தில் பற்றுடையவர் என்று கேள்வியுற்ருல் உடன் தாமே வலியச்சென்று அவரை நண்பராக்கிக்கொண்டுவிடுவார். எதையும், எங்கும், யாரிடத்திலும் எடுத்துச்சொல்ல அவர் அஞ்சவேமாட்டார். தோழர் அன்பழகன் அவர்கள் மேடை ஏறிப் பேசும்போது, எதிர்தரப்பு மாணவர்கள் ஏராளமாக இருந்துகொண்டு கையொலி செய்தும், ஏளனச்சிரிப்பு சிரித்தும், கூச்சலிட்டும் இடையிடையே குழப்பத்தை உண்டாக்க முயல்வர். அவர் எதனையும் பொருட்படுத்தாது, உரத்தகுரலில் சளைக்காமல் பேசி இறுதியில் வெற்றிகொள்வார். சில சமயங்களில் மாற்றுக் கருத்துடைய மாணவர்கள் அடிதடிசண்டைக்குக் கிளம்பிவிடுவார்கள். அவர் அதனை எதிர்த்துச் சமாளிக்க முயலுவாரே ஒழிய, அஞ்சி ஓடிவிடமாட்டார்.

நானும் தோழர் அன்பழகன் அவர்களும் ஆனர்சுபடிப்பில் ஒரே வகுப்பு மாணவர்களாக இருந்துவந்தோம். நாங்கள் நான்காம் ஆனர்சு வகுப்பில் படித்துக்கொண்டிருந்தபோது, எதிர்தரப்பு மாணவர்கள் வேண்டாதவேலை நிறுத்தம் ஒன்றைத் திடீரென்று ஒருநாள் மேற்கொண்டனர். அவர்கள் பெருங்கூட்டமாக ஒவ்வொரு வகுப்பு அறைக்கும் சென்று, விரிவுரையாளர்களையும், மாணவர்களையும் வெளியேற்றிக்கொண்டேவந்தனர். நான்காம் ஆனர்சு வகுப்பில் எட்டுபேர்தான் பயின்றேம். நாங்கள் எட்டுபேரும் கட்டுப்பாடான கருத்துடையவர்களாக இருந்தோம். எங்கள் வகுப்புநடந்துகொண்டிருக்கும்போது எதிர்தரப்புமாணவர்கள் உள்ளே நுழைந்து வெளியேறும்படி கூச்சலிட்டு வற்புறுத்தினர். உடனே எழுந்து "முடியாது! வெளியேற முடியாது!" என்று உரத்தகுரலில் முழக்கமிட்டவர் தோழர் அன்பழகன் ஆவார். அவர்களுடைய சரமாரியான கேள்விகளுக்கு அவரே ஏற்ற விடை இறுத்துக்கொண்டேயிருந்தார். மற்றஅனைவரும் கட்டுப்பாடாக அப்படியே அமர்ந்திருந்தும், இடையிடையே வாக்குவாதத்தில் கலந்துகொண்டும் அவருக்கு உறுதுணையாக இருந்தோம். அதற்குள் வேலைநிறுத்தமாணவர்கள் எங்களுக்குப் பாடஞ்சொல்லிக்கொடுத்துக் கொண்டிருந்த விரிவுரையாளரை விரட்டினர். அவரும் அச்சங்கொண்டு எழுந்து வெளியேறிவிட முயன்றார். உடனே தோழர் அன்பழகன் அவர்கள் பாய்ந்து சென்று அவரைப்பிடித்து இழுத்து இருக்கையில் உட்காரவைத்துவகுப்பை நடத்துமாறு வற்புறுத்தினர். எதிர்தரப்பினர் வேறுவழியில்லாமல் நீண்டநேரம் கழித்து வெளியேறினர்.

இயக்கம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் வேரூன்றுவதற்குப் பெருந்துணை புரிந்தவர்களில், தோழர் க. அன்பழகன் அவர்கள் முக்கியமானவரும், முதன்மையாவரும் ஆவார்கள்.

—இரா. நெடுஞ்செழியன்.

Regd- M 6296

(மலாயா) தமிழ்ப்பெருமக்களுக்கோர் முக்கிய அறிவிப்பு!

தமிழகம் தந்த தனிப்பெரும் பாட்டி அவ்வையின் பெயரால் அகில மலாயாவிலேயே முதன்முதல் தோன்றிய எங்கள்,

அவ்வை புத்தக நிலையம்.

142, ஜாலன் இட்ரீஸ், கம்பார் (மலாயா) ஒன்றே!

போலிகளைக்கண்டு ஏமாறாதீர்கள்!!

அன்புடையீர், வணக்கம்,

நீங்கள் நீண்ட நாட்களாக எதிர்பார்த்த தமிழக அறிஞர்கள், கவிஞர்கள், கலைஞர்கள், பாவலர்கள் எழுதிய நூல்கள் யாவும் வந்துவிட்டன. மற்றும், தினசரி - வார - மாத பத்திரிக்கைகளும், ஆங்கில, காமிக்ஸ்-மேக்கிசன், நாவல்களும், மலாய் வார - மாத - பத்திரிகைகளும் நாவல்களும் சினிமா - கதை வசன பாட்டு புத்தகங்களும் மொத்தமாகவும் சில்லரையாகவும் கிடைக்கும்.

குறிப்பு:—விற்பனையாளர்களுக்குக் கழிவு உண்டு. வெளியூர் ஆர்டர்களை, தாமதமின்றி கவனிக்கப்படும்.

விவரங்கட்கு:

AVVAI BOOK STALL

142, JALAN IDRIS, KAMPAR. MALAYA.

உரிமையாளர்:—கோ. வரதராசன். டெலிபோன்: 9... 22

---

தமிழ் நாட்டில் தலை சிறந்த




வெண்சங்கு சீயக்காய்தூள்

எங்கும் கிடைக்கும்

எங்களிடம் தயாராகும் மணத்தில் சிறந்த

செல்வம்—ராணி ஊதுபத்திகளை

வாங்கி உபயோகியுங்கள்

தயாரிப்பாளர்:- வெண்சங்கு சீயக்காய்தூள் தொழிற்சாலை

3037-38, டபீர் குளம் ரோடு, தஞ்சாவூர்.


"மன்றம்" அச்சகத்தில் (26, நைனியப்பன் தெரு, மண்ணடி, சென்னை-1)

ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன், எம். ஏ. அவர்களால் அச்சிடப்பட்டு வெளியிடப்படுகிறது.

